உ

சிவமயம்.

# இராமேச்சுர மான்மியமென்னும்

# சேதுமகத்துவம்

இஃது

இராமேச்சுரஞ் சேதுமாதவர் கோவிலில்

சேதுபுராணப்பிரசங்கம்

ஆறுமுக உபாத்தியாயரவர்களுடைய

ஏட்டுப் பிரதியின்படி

சங்கிரகமாகச் செய்து

பிழையறப் பரிசோதித்து,

---

மதுரை புதுமண்டபம் புஸ்தகஷாப்

**நா. செல்லையா பிள்ளை**

அவர்களால்

---


மதுரை

மீனலோசனி அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றது.


---




1921

இதன் விலை அணா 6



உ

சிவமயம்.

# இராமேச்சுர மான்மியமென்னும்

# சேதுமகத்துவம்

## விநாயகர் தோத்திரம்.

திங்களங் குழவி யென்னத் திகழொரு மருப்பிற் சோதி
தங்குகிம் புரிவ யங்கத் தடமணி மகுடந் தாங்கித்
துங்கநல் வாங்க ணல்குந் தூயசீ ரிராம சேதுப்
புங்கவர் வணங்கும் யானை முகத்தனைப் போற்றல் செய்வாம்.

## இராமநாத சுவாமி.

பூமலி இதழி சூடும் புதுநிலா மகுட வேணி
நாமலி சுருதி போக்கும் நம்பிரா னிராம நாதன்
ஏமலி சிலையி ராமர்க் கிராவணன் பிர்ம கத்தி
தீமலி இடுக்கண் தீர்த்த சேவடி சென்னி வைப்பாம்.

பூந்தவிசி னிருந்தபிரான் முதலோர் காணப்
புண்டரிக மகள்கொழுநன் புகழி லங்கை
வேந்தனுயிர்ப் பழிகழுவு முகத்தால் யார்க்கும்
விடையவனே யுடையவனும் போத வாய்மை
யந்தரங்கம் வெளிசெய்ய அனைவ ரோடு
மணைந்துகந்த மாதனத்தி லருச்சித் தேத்து
மிந்துபுனற் சடிலமுடி யிராம நாத
னிணையடிச்செந் தாமரைக ளிறைஞ்சி வாழ்வாம்.

---

## ஸ்ரீ பர்வதவர்த்தனியம்மன்.

தண்ணெனவும் வெச்சனவுந் தந்து சாயத்
தகைபயின்று விடநீக்கித் தலைவர்க் கென்று
முண்ணமுதந் தனையுதவி யிமைய மேரு
வுயர்சிகா மந்திரத்தை யொருவிச் சேர்ந்துஞ்

கண்ணுதலை விளர்ப்புறலாற் கயிலை யெள்ளிக்
　கௌணியர்க்குத் தமிழ்சுரக்குங் காட்சி யாலே
வண்ணமுலை மலயமலை மானுங் கன்னி
　மலைவளர்கா தலிமலர்த்தாள் மனத்துள் வைப்பாம்.

## நடேசர்.

பூமாது பொலிவெய்த முகுந்தன் காக்கும்
　புவிமாது வளம்பெருகப் புலமை சான்ற
நாமாது நலந்தழைப்ப விருள்கால் சீக்கு
　நகைநிலவு தவழ்மவுலி நன்னீர்க் கங்கை
மாமாது புனறுளிப்ப மறைகள் வாழ்த்த
　வளர்தில்லை யம்பலத்துள் வாம நீங்கித்
தேமாது விழிகுளிர வமரர் போற்றத்
　திருநடஞ்செய் நூபுரத்தாள் சென்னி சேர்ப்பாம்.

## கணபதி.

வேணிமுடிப் பகிரதிநீர் புழைக்கை வாங்கி
　விடுத்தசன்வெண் டலையுருட்டி மிளிர்வெண் கோட்டாற்
கோணிலைய மதிக்குழவி யுழுது மேருக்
　கொடுமுடியிற் கிளைத்தவெண்டோள் குழையத் தாக்கித்
தாணெடிய விடைமுனிந்து கயிலை முக்கட்
　டாதையொடும் விளையாடித் தன்பா லன்பர்
மாணிலவு மனத்தறிவின் றுலாவுந் தெய்வ
　வாரணத்தை நினைந்திறைஞ்சி வழுத்தல் செய்வாம்.

## சிவசுப்பிரமணியக் கடவுள்.

குலவுமலை மகள்கலசை முலைப்பால் வாசக்
　குமுதமவள் கொழுநர்மறை கொழிக்குஞ் செவ்வி
நிலவுமுக மலர்கமழச் செய்து முன்னோ
　னெடுந்துளைக்கை பிடித்தேறி நெற்றிப்பட்டத்
தலவியிவ ரொருமூவ ருவப்ப மாலோ
　டும்பர்கணங் களிதூங்க வுலக மூடு

## சேதுமகத்துவம்.

கலபமா கதமயிலூர் கழற்கால் வென்றிக்
 கந்தனைவந் தனைசெய்து கருத்துள் வைப்பாம்.

### கலைமகள்.

கவள்மத கரியுரிவைப் போர்வை மூடுங்
 கண்ணுதலோன் புகழ்விரிக்கும் கலைகள் யாவும்
பவளவிதழ்ப் பசுங்குதலை மொழியிற் காட்டும்
 பைந்தொடியை யந்தணன்றேய் பரும வல்குற்
றுவளுமணி மருங்குவிள நிலவெண் மூரற்
 சுந்தரியை வெண்கமலத் தோட்டு வட்டத்
தவளமதி நடுவமர்வா லெகினம் போலுந்
 தையலைமை யலையகற்றித் தாளிற் றாழ்வாம்.

### நந்திதேவர்.

போதனுறை மலர்முகிழா தமரர் கோமான்
 புரநிலைமை குலையாது மருது போழ்ந்த
பாதனுறை கடல்சுருங்கா தரிணைஞ் சூரன்
 படைமழுவன் சுரிகைகரம் பரித்துப் பார்தட்
காதனுறை சிதறுபுனற் கங்கை சூடுங்
 கண்ணுதலெம் பான்மதியுங் கதியு நல்கு
காதனுறை திருக்கயிலைக் காவல் பூண்ட
 நந்தியைநம் புந்தியின்க ணயந்து வாழ்வாம்.

### திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்.

சங்கமணிக் குழைதயங்கத் தழைத்த காதுந்
 தணிவிடையு முதலபல தணப்பில் காட்சி
பொங்குமடை யாளங்கள் புகன்று போற்றிப்
 பொருவிறந்த பரஞ்சுடரைப் புந்திக் கெட்டா
வங்கணனை வழுதியுடல் வெப்பு நீங்க
 வணிதிகழ்வெண் டிருநீறு னள்ளிச் சாத்துஞ்
செங்கைவிரல் கொடுகுறித்துத் தெரிக்குந் தோன்றல்
 சிற்றடியின் பெருந்தகைமை சிந்தை செய்வாம்.

## திருநாவுக்கரசு நாயனார்.

தேவரையு முனிவரையுந் தூவள மார்பிற்
றிருவரையுங் குரவரையுஞ் செல்வ மிக்கோர்
யாவரையு மேவல்கொளு நெற்றி நாட்டத்
திறைவரைமுன் னிகந்திருந்த வெண்ணந் தோன்றச்
சேவரையு நெடுங்கொடியின் றகைமை யெல்லாத்
திசைவரையுஞ் செலத்தமிழின் செய்யுள் பாடு
நாவரையர் புகழ்மொழிகள் வரைந்து கூறி
நயந்தவர்செய் திருத்தொண்டு வியந்து வாழ்வாம்.

## சுந்தரமூர்த்தி நாயனார்.

தாதுகொண்ட மலர்ச்சுரியற் பாவை யென்பா
டனத்துணைமேன் மயற்குளிரின் றளர்வு தீர
வேதுகொண்டு விழையுநெறி விரும்பி மாலும்
விரிஞ்சனுமுன் னெருடாத வெளியை யாரும்
யாதுகொண்டு மறிவரிதா யெங்கு மான
வரும்பொருளை நெருங்குமிரு ளிரவின் மீளத்
தூதுகொண்டார் தமையெனையாட் கொள்வீ ரென்று
சொல்லியவர் பதம்புல்லித் தொழுதல் செய்வாம்.

## மாணிக்கவாசக சுவாமிகள்.

செழியர்குல பதிகொடுத்த மாடு கொண்டு
சென்றுதிருப் பெருந்துறையிற் செறிந்த சம்புப்
பழிவிரவு பரித்திரள்கொண் டணைந்து மாறன்
பணித்தவிடர்க் கிரங்கியருள் பாடிப் போற்றி
வழியமுத கிரணநிலா மகுட மீதே
மதுரையமர் பரம்பரனை வந்திக் காகச்
சுழிபெருகு புனற்றரங்க வைகை வாய்மண்
சுமப்பித்தார் பதந்தலைமேற் சுமத்தல் செய்வாம்.

## சண்டேசுர நாயனார்.

மனுதிகளுக் கெட்டாத பரமா னந்த
வாழ்வினையைக் கோரிலிங்க மணலாற் கூப்பித்
தனுநியந்தந் தனினின்றுந் தாபித் தான்பா
றழைத்தவன்பா லாட்டவந்து தடுக்கத் தாதை
யெனுதவன்ற னிருபதமு மழுவாற் றுண்டித்
திகழ்ந்தவனைப் பாவத்து விருத்தித் தானும்
பினுகியரு ளடைந்தவிறற் சண்டே சன்றாள்
பிரசமல ரிறைத்திறைஞ்சிப் பேசு வாமே.

## மெய்கண்டதேவ நாயனார்.

அல்லாத பரசமய வலகைத் தேர்வின்
டகலவகல் புனற்பெண்ணை யயல்சூழ் வெண்ணெய்
பொல்லாத விபமுகத்துத் தேவு தன்பாற்
புனிதசிவா கமப்பொருண்மை பொருந்த வாய்ந்து
நில்லாத நிலையிதுமற் றொன் று பொன்று
நிற்குநிலை யிதுவெனமெய் நெறிதேர்ந் தியாரும்
வெல்லாத சிவஞான போதஞ் சொன்ன
மெய்கண்டான் சரணமுடி மீது கொள்வாம்.

## திருத்தொண்டர்.

முன்னடைய வரியசிவ முத்தி பெற்றோர்
முதுலகி லதுவிரும்பி முயலா நின்றோர்
பின்னடைய வருமவர்கண் முதலா யுள்ள
பிள்ளையிள வெள்ளைமதி பிறங்கு வேணி
மின்னடையு மணிமௌலி வேத கீதன்
வெண்ணீறுங் கண்டிகையு மெய்வி டாமற்
றன்னடைநன் னெறிதம்மை யடைந்து ளார்க்குந்
தருந்தொண்டர் பெருந்தொண்டு தலைமேற் கொள்வாம்.



உ

கடவுள் துணை.

சூதபுராணிகர் சௌனகாதிரிஷிகளுக்குப்

புராணம் சொல்லியது.

# நைமிசாரண்ய வனச்சிறப்பு.

நைமிசாரண்ய மென்னப்பட்ட வனத்திலே பிர்மதேவனுடைய கோடி யுகங்கள் கண்டவர்களாய் தேவாமிர்தங்களைப் புசித்தவர்களாய் காமக் குரோத லோப மோக மத மாச்சரியங்கள் எள்ளளவு மில்லாதவர்களாய் பிர்மசாரி வானப்பிரஸ்தன் சன்னியாசியான் பெரியோர்கள் சடைமுடிகளுடனேயுஞ் சிரமுண்டிதங்களாகவும் மரவுரி கிருஷ்ணாசனம் புலித்தோலாசனந் தெர்ப்பாசனங்களையுடையவர்களாய் பிர்மா, விஷ்ணு, ருத்திரன், மகேசுரர், சதாசிவன், பராசத்தி முதலான தேவதைகளை உபாசனைசெய்து சதாகாலமும் நாலுவேதம் ஆறுசாஸ்திரம் பதினெண் புராண ஆகமங்களை ஒருவருக்கொருவர் வினவிக்கொண்டும்அதே கவனமாய்ப்பேசிக்கொண்டு மிருப்பார்கள். அப்படியவர்கள் பேசிக்கொண்டிருக்கின்ற வேத சாஸ்திர புராணங்களைக் கேட்டுக்கொண்டு அந்தவனத்தில் சஞ்சாரம் பண்ணிக்கொண்டிருக்கிற கிளிகள் நாகணவாய் முதலான பட்சிகள் தங்கள்தங்கள் சுயபாஷைகளை முழுதும் மறந்துவிட்டு வேதசாஸ்திரங்களைப் பேசிக்கொண்டு அந்தப் பாஷையையே தங்களுடைய குஞ்சுகளுக்கும் கற்பிக்கும். அவ்வித பெரியோர்களும் பட்சிசாதிகளும் பேசப்பட்ட சாஸ்திரங்களையும் அதனுடைய இங்கிதங்களையும் அந்த வனத்தில் சஞ்சாரம்பண்ணிக் கொண்டிருக்கிற காடி புலி சிங்கமுதலான மிருகசாதிகள்கேட்டு ஒன்றுக்கொன்று பகைகளில்லாமல் ஒருகூட்டமாகவும் கூட்டுறவாய் கீரியும் பாம்பும் நாயும் பூனையும் சிங்கமும் யானையும் புலியும் பசுவும் ஒரு துறையிலே தண்ணீர்குடித்து வளர்ந்துகொண்டிருக்கும். வனமெல்லாம் பாரிஜாதம். மந்தாரம், புன்னை, வில்வம், சந்தனம், ஆச்சா, தேக்கு,

தேவதாரம், திருவாத்தி, மகிழம், பலா முதலான விருட்சங்களும் மல்லிகை, இருவாட்சி, செண்பகம், சுகந்தம், துளசி, பாதிரி முதலான புஷ்பசாதிகள் நெருங்கிய பூங்காவும், தடாகங்களும், மலைகளும், குகைகளும், நெருங்கியிருக்குஞ் சந்திர சூரியர் செம்மையாய்ப் பிரகாசிக்கக்கூடாத நெருங்கின சோலைகளாய்த் தெய்வீகமாய் ரமணீகரமாய்ப் பார்க்கப் பதியினாயிரங்கண் வேண்டிய தாய்ச் செகஜ்ஜோதி நிறமாய்ச் சச்சிதானந்த சொரூபமாய்த் திவ்விய வாசனைகளோடு கூடினதாய் எந்தலோகங்களும் நிகரில்லாததாய்ச் சகலமான ரிஷிகள் தபோதனர்கள் எங்கே நிறைந்திருந்தாலும் வந்து கூடுகிற இடமாய் எப்போதும் பெரியோர்கள் அவாவர்கள் சிஷர்களுடன் பத்தினிகளுடன் நெருங்கியிருந்து மூலாதாரஞ் சுவாதிஷ்டானம் மணிபூரகம் அனாகதம் விசுத்தி ஆக்கினையென்றுசொல்லப்பட்ட சடாதாரங்களையுஞ் சோதனைபண்ணி இடைகலை பிங்கலை சுழிமுனை மூன்றையும் ஒன்றாகக்கூட்டி பிரமாந்திரபரியந்தம் மேலேயெழுப்பித் துவாதசாந்தத்திலேயிருக்கிற அகண்டாகார சின்மயானந்த சொரூபமான சாக்ஷாத்காரத்தைக்கண்டு களிப்புற்று ஆனந்தசாகரங்களையுண்டு தெவிட்ட யாதொன்றுந் தெரியாமற் சொக்கிப் போயிருக்கிற யோகபரர்களும் அக்கினிகோத்திர மெக்கியங்கள் யாகாதிகள் ஒன்றுமொன்று குறைவுபடாமல் நிறைவேற்றிக்கொண்டிருக்கிற வானப்பிரஸ்தர்களும் ரிஷீஸ்வரர்களுந் தலைகீழாய்ப் பஞ்சாக்கினிமத்தியிலேயும் ஒற்றைக்காலுடனே ஊசிமுனையிலேயும்நிலத்திலே ஒரு கையை ஊன்றிக்கொண்டும் இரண்டுகையை ஊன்றிக்கொண்டும் ஒற்றைவிரலை ஊன்றிக்கொண்டுந் தவசு செய்யும் தவசிகளும் கணக்குவழக்கு அளவு சங்கையில்லாமல் பெரியோர்களாய் நெருங்கிக்கொண்டிருக்கும்படிக்கொத்த தபோபலங்களாலே பிரமப்பிரளயந்தள்ளி காலாந்தரங்களையுங்கடந் திருக்கிற பெரியோர்கள் நெருங்கின நைமிசாரண்ணிய வனத்துக்குப் போகவதி பட்டணத்திற்கு அதிகாரியான இயமன் ஒரு தூதனையாவது அனுப்பிவைக்க நினைக்க மாட்டான். கண்டிருக்கவுமாட்டான். எல்லாரிஷிகளும் கற்பகோடிகாலங் கண்டவர்களாயிருப்பார்க ளப்படிக்கொத்த நைமிசாரண்ணியத்திலே சௌனகாதிமுனிவர் முதலான பெரியோர்கள் முத்திமோட்சத்திலே விருப்பமுள்ளவர்களாய் இருபத்தாறாயிரம்பேர்கள் ஒரு கூட்டுறவாயிருப்பார்கள்.

அவர்களுடைய மாணாக்கர் ரிஷிகள் அளவிறந்த கோடிபேர்க
ளிருப்பார்கள், அப்படிக்கொத்தவர்கள் ஈஸ்வரனுடைய பாதாரவிந்
தங்களை மானதபூசைகளினாலே அர்ச்சனைபண்ணி வணங்கி குற்றமில்
லாத புண்ணியகதைகளை யொருவர்க்கொருவர் பேசிக்கொண்டிருக்
கிற வேளையிலே வேதவியாசருடைய மாணாக்காகிய சூதமாமுனிவர்
அந்தவனத்தைநோக்கி எழுந்தருளிவந்தார். அப்படிக்கொத்த சூத
மாமுனிவர் வருகிறதை சௌனகாதி முதலான இருபத்தாறாயிரம்
பேர்களான பெரியோர்களுங்கண்டு திடீரென்றெழுந்திருந்து எதிர்
கொண்டழைத்து தெர்ப்பாசனத்தி லெழுந்தருளப்பண்ணி அர்க்கிய
பாத்தியங்களளித்து சோடச உபசாரபூசனைகளும்பண்ணி வணங்கி
நமஸ்காரம்செய்து அநேக தோத்திரங்கள்பண்ணி சகலமான தீர்த்
தங்களையுந் தவங்களையுஞ் சகலமான க்ஷேத்திரங்களையுமடைந்தவர்
களாய்ச் சந்தோஷங்களையடைந்து ஆனந்தக்கூத்தாடி மகிழ்ந்து
சுவாமி சூதமகாரிஷியே! வேதவியாசருடைய அனுக்கிரகத்தினாலே
சகலமான கதை புராணங்களைக்கேட்டறிந்து சகலமுந்தெரிந்திருக்
கிற மகா முனியான சுவாமியை இன்றையத்தினம் நாங்கள் கண்டு
வணங்க என்ன பூசாபலம் புண்ணியவிசேஷஞ் செய்திருந்தோமோ
தெரியாது. நாங்கள் செய்த தபோபலமே சாமியைக்கொண்டு வந்து
விட்டது. அடியேங்களுக்கு பிரமா விஷ்ணு ருத்திரன் மகேசுரர் சதா
சிவமான ஈஸ்வரபாதங்களை யடையும்படியான மோக்ஷங் கிடைக்கும்
படியாகவும் மூர்த்தி மகிமை தீர்த்த மகிமை ஸ்தல மகிமை இந்த
மூன்றும் ஒன்றாய்ப் பொருந்தினதாயுஞ் சகல லோகங்களுள்ளும்
கண்ணியமாயிருப்பதாயும் அரிதானதாகவும் மேலானபுண்ணியலோ
கங்களைக்கொடுக்க வல்லமையுண்டானதாயுஞ் சகலபுண்ணிய நதி
களுக்கும் சகலதேவதைகளுக்கும் மேலானதாயும் இந்தப் பஞ்சா
சதகோடிமண்டலத்திலே எந்தத்தீர்த்த மெந்தஸ்தலம் எந்த மூர்த்தி
மேலானதோ அதை எங்களுக்குத் தெரியும்படி சொல்ல வேணு
மென்று சௌனகாதிமுனிவர் முதலான பெரியோர்கள் கேட்க, சூ
மாமுனிவர்கேட்டு மகா சந்தோஷத்தையடைந்து பெரியோர்களே
நீங்கள் நன்றாய்க் கேட்கிறீர்கள். அப்படிக்கொத்த புண்ணி
தீர்த்தம்மூர்த்தி ஸ்தலங்களுமிருக்கின்றன. அதை முன்னமே சொ
னேன். அப்படிச்சொன்ன புண்ணியகதைகளில் வெளியிடக்கூட
தென்று மறைத்திருந்ததை இப்போது நீங்கள் அபேட்சையா

கேட்டபடியினாலே சொல்லுகிறோம். நீங்களெல்லோரும் ஒன்றாய் ஒருமனதாயிருந்து இதுவரையிலே கேட்டிருக்கிற புண்ணிய கதைகளைப் போலே இதையும் எண்ணிவிடாமல் பயபக்திவிசுவாசத்துடனந்தக்கரணசுத்தியாய் வேறே ஞாபகமில்லாமல் கேட்பீர்களானால் வேறேபுண்ணியம், வேறேயாகம், வேறேமந்திரம், வேறேஜெபங்களும் யாதொன்றும் வேண்டியதில்லை. இது அப்படிக்கொத்த புண்ணியகதையாக்கும். இதனுடைய மகிமையை இரண்டாயிரம் நாவைப்படைத்த ஆதிசேடனாலுஞ் சொல்லமுடியாது. நாமுங்கள் பேரிலிருக்கிற வாஞ்சையினாலே சொல்லுகிறோம். கேளுங்களென்று சூதமகாமுனிவர் நைமிசாரணியத்திலேசௌனகாதிமுனீஸ்வரர்களுக்குச் சேதுமகத்துவத்தையு மதின் சார்பிலேயுண்டாயிருக்கிற தீர்த்தமகிமைகளையுங் கந்தமாதனபர்வதமகத்துவத்தையும் ஸ்ரீராமநாதசுவாமியுடைய கிருபானந்தங்களையுஞ் சவிஸ்தாரமாகச் சொல்லுகிறோமென்று சொல்லத்தொடங்கினார்.

நைமிசாரணியவனச் சிறப்பு
முற்றிற்று.

---

உ
கடவுள்துணை.

## சேதுமகத்துவம்.

---

சேதுஸ்நானம் பண்ணினபேர்கள் அடையும்
பலனைச்சொல்லுகிறது.

### சேதுபலச்சருக்கம் ருக-ம் செய்யுள்.

---

இனைய சேதுநீ ளார்வந்து தீண்டினு மிதுதனை யெஞ்ஞான்று
நினைவு செய்யினுங் காண்கினுங் கேட்பினும் நீங்கிடுந் துயரெல்லா
மனையு மத்தனு மாயிடு மாயவ னருள்செயு மச்சேது
தனைநிகர்ப்பதொன் றிலையருந்தவநெறி தழைக்குமந்தணர்காளே.

மகாமேருவுக்குத் தெட்சணபாரிசத்தில் பரதகண்டத்தில் கன்னியாகுமரித்தீவில் கந்தமாதனகிரி மலைச்சாரலில் லவணசமுத்திரக்கரையில் அயோத்தியாபுரிபட்டணத்து ராஜராஜாவாகிய சக்ரவர்த்தி

தசரதமகாராசருடைய குமாரனாகிய ஸ்ரீ ராமச்சந்திரமூர்த்தியாலுண்
டாக்கப்பட்ட சேதுவாகிய ராமேஸ்வரத்தில் மகிமை பொருந்திய
தீர்த்தங்க ளநேகமுண்டு. அதிலும் மேன்மையானதாய் மோனவா
னந்த முத்திகளையும் கொடுக்கப்பட்டதாய் மகத்துவமுடைய சேது
வென்று சொல்லப்பட்ட தீர்த்தம் ஒன்று. அந்தத்தீர்த்தத்தை ஜென
னமெடுத்தவன் 'கண்ணாலேகண்டானாகில் ஒருகர்ப்பகோடிகாலம்
கைலாசத்திலே அவனுடைய தாயார் தகப்பன் புத்திரமித்திரகளத்
திராதிகளுடன் கோடிதலைமுறைவரையில்சொந்தமான பேர்களுடன்
ஆனந்தபோகங்களை யடைந்திருந்து மோட்சத்தையுமடைவான்.
ஆகாசத்திலேயிருக்கிற நட்சத்திரங்களை ஒன்றாக எண்ணினாலும்
இந்த க்ஷேத்திரத்தைக் கண்ணாலேகண்டபேர்களுடைய பலன்களை
ஆதிசேடனாலேயுஞ் சொல்லமுடியாது. அநேகமான யாகாதிகிர்த்தி
யங்கள் எக்கியங்கள் வேள்விகள் யாத்திரைகள் பண்ணின பலன்
களை உடனே கொடுக்கும். ஆராவ தொருவன் ஒரு அன்னியனைச்
சேதுவுக்குப்போய் ஸ்நானம்பண்ணிவாருமென்று சொன்னாலும்
அவன் வாயினாலே சொன்னவுடனே அதுவரையில் செய்த அந்தப்
பாவங்களெல்லா மவனைவிட்டு நீங்கிக் கிருதார்த்தனாவா னப்படிக்
கொத்தவொருவ னந்தச்சேதுவிலே ஸ்நானம்பண்ணினால் அவனு
டைய குலம் 'எழுகோடி தலைமுறையில் செய்த பாவங்களெல்லாம்
நீங்கி சாயுச்சியபதத்தை யடையும்படியா யிருப்பான். அப்படி
ஸ்நானம்பண்ணினவ னந்தச் சேதுக்கரையிலிருக்கிற கந்தமாதன
பருவதத்தையும் அதில் வாசம்பண்ணுகிற ஸ்ரீராமநாதனையும் அந்தச்
சேது தனுக்கோடியையு மெவன் மனதிலெண்ணி நினைக்கிறானோ
அவன்செய்த பாவமெல்லாம் அப்போதே அதமாய்த் தொலைந்து
விடுகின்றது.

பின்னு மவனுடைய தாயாதிவழியில் கோடிலட்சந்தலைமுறை
யில் சொந்தத்துடனே மூன்று கற்பகாலஞ் சிவபதமடைவார்கள்.
பஞ்சமாபாதகங்கள் செய்தவர்களாயிருந்தாலும் இந்தச் சேதுவில்
தீர்த்தமாடினால் மூன்று பிரம்மபட்டம்வரையிலும் வைகுண்டலோ
கத்தை அடைந்திருந்து சகல சாம்பிராச்சியத்தையநுபவிப்பார்கள்.
ஒருநாளும் எப்படிக்கொத்தபாவிகளும் எமலோகத்திலேயிருக்கமாட்
டார்க ளவன்சதையைச் சாப்பிடமாட்டான்; நாயினுடையமாமிசங்
களைப்பொசியான், மூத்திரங்களையும் நாயின் மூத்திரங்களையும் குடி
யான், இரும்பு அம்மி ஆட்டுக்கல் செக்குகளிலே அரைபுண் டுறை
னுவிழுகான், புழுவைச்சாப்பிடான், நெருங்கின இருப்புமுள்ளுகள்

ஞலே கேசாதிபரியந்தஞ் சுருக்குச்சுருக்கென்று குத்துப்படாமலிரு ப்பான், மலஜலாதிகளை யெடுத்துப் பூசிக்கொள்ளான், கல்மலை அக் கினி மலையிலேஅவஸ்தைதப்படான்,அக்கினிக்குழியிலேஇரத்தக் குள த்திலே விழுந்து நீந்தான், அக்கினியிற் பாய்ந்து கரையேறுன்,தலைகீ ழாய் வானவழியிலே தூங்கிடான், காமநீர்களைக் குடியான், மலங்களை க்கட்டியாகச் சாப்பிடான், மேலேயும் பூசிக்கொள்ளான், வாளாயுதங் கத்தி கருக்கு வாளாலே துண்டு துண்டாய் எமகிங்கராலே கட்டு ண்டு அறுபடான், வாதநீர் பித்தநீர் சிலேட்டுமநீர்களைப் பொசியான், கோழை மூளைகளை விழுங்கான், மலைப்பாம்புகளாலே கடிபடான், கா ட்டானையுடைய கால்களாலே மிதிபடான், அதினுடைய கொம்பு களாலே குத்துண்டு வாதைப்படான், காய்ந்து கொண்டிருக்கின்ற எண்ணெய்க் கொப்பறையில் போடப்படான், எண்ணெய்களை வாங் கிக்குடியான், மலங்களை வாரிவாரிப் போட்டுக்குத்துண்டு கிடக்கான், கண்ணிலுங் காதிலும் மூக்கிலும் இருப்புச் சிலாகையால் சுறுக் கென்ற குத்துவாங்கான், பற்றுக்குறடுகளைக் காயப்போட்டு ஒவ் வொரு எலும்புகளாய்ப் பிடுங்கப்படான், வசத்திலேறி மலமூத்திரக்கி ணற்றில் விழுகான், சூலாயுதம் வேலாயுதம் பதினெட்டு ஆயுதங்க ளாலே வெட்டிப்பிளந்து சதை சதையாய்ப் பேர்க்க இடங்கொடுக் கான், இருப்புப்பாசங்களாலே கட்டுண்டு உருகான், புகைக்குகையி லிருந்து வெம்பி மடியான், அக்கினியிற்காய்ந்த இருப்புப் பலகை யில் படுக்கான், ஆண்குறி பெண்குறியிலே தூண்டிகளைப் போட்டுத் தூக்கி அக்கினிக்கு நடுவேகட்டத் தூங்கான், இருப்பு ஊசிகளினு லே எந்த இடங்களிலும் குத்துண்டு வாதைப்படான், ஈயங்களைக் காய்ச்சி வாயிலும் அபானத்திலும் விட மயங்கமாட்டான். இப்படிக் கொத்த தீமைகளைச் செய்யப்பட்ட ரௌரவாதி நரகங்களாகிய இரு பத்தெட்டுக் கோடி நரகத்திலும் அழுந்தான்.

இந்தத் தனுக்கோடியை நோக்கித் தீர்த்தமாடப் போகிறேனெ ன்று நூறடி தூரம்போய் வந்து விட்டாலும் அவர்களுமிப்படிக் கொத்த எமதண்டனைக் குள்ளாகாமல் சொர்க்காதி போகங்களை அனுபவிப்பார்கள். ஸ்ரீராமமூர்த்தியாலே கட்டியிருக்கிற சேதுவின் பேரிலே காற்று விழுந்து பறக்கிற மணல்கள் தூசிகளுடைய தொகை எவ்வளவோ அவ்வளவு பாவங்கள்! அவ்வளவு ஸ்ரீஹத்தி

பிரம்மஹத்திகள் செய்திருக்கிற பாவங்களாயிருந்தாலும் உடனே அவர்களைவிட்டு விலகிப்போம். சேதுவிலே யார் தீர்த்தமாடுகிறார்களோ அவர்களுடைய சிரசிலே இருக்கிற கண் காது மூக்கு வாய் இவைகளின் வழியே சேதுதீர்த்தம் நுழைந்து வந்தால் அப்படிக்கொத்த கண், காது, மூக்கு, வாய், சிரசுகள் தெய்வலோக போகங்களைக் கற்பகாலங்களிலும் அநுபவித்துக்கொண்டிருக்கும். தங்களுடைய புத்திர பவுத்திராதிகளுடன் தெய்வலோகத்திலே இரண்டாயிரம் மூவாயிரம் வருஷம் வாழ்ந்து கொண்டிருப்பார்கள். சேதுவில் விழுகிற காற்று யார்மேலே படுகிறதோ அவர்கள் சுராபானம் பண்ணியிருந்து அதினாலே நடந்த பாவங்களுங் காற்றோடே காற்றாயோடிப்போம், பின்னும் உடனே அந்தச்சேதுவில் ஒரு முகூர்த்தம் வாசம் பண்ணிக் கொண்டிருந்து தீர்த்தமாடினால் நானாவிதமான பாவங்களும் விலகிப்போம். வழி மார்க்கத்திலே அடித்துப் பறித்தவன் பெரியோர்கள் பிராமணர் சிவபூசைகளுக்குத் துரோகம் பண்ணினவன், ராஜர்களுக்குப் பொய் சொன்னவன், சாப்பிடுகிறதே வேலையாயிருந்து சத்கர்மஜெபதவங்களை விட்டுவிட்டவன், வேதசாஸ்திரங்களைவிற்றவன், பசுக்களை குதிரைகளை பத்தினி பிள்ளைகளை விற்றவன், தெய்வப் பிராமணர்களுக்கு ஒருபதார்த்தந் தருகிறேனென்று வாக்குத்தத்தம் பண்ணி அப்பால் இல்லையென்று சொன்னவன், அவர்களுக்குக் கொடுத்ததை வாங்கி அபகரித்து திரஸ்காரஞ் செய்தவன், சிவபூசை விஷ்ணுபூசை சாதுக்கள், பெரியோர்கள் பூசையிலே கோபித்தவன், விவாதஞ் செய்தவன், பெரியோர் பிராமணர்களைக் கொன்றவன், பசுமுதலான ஜீவன்களை இரை தண்ணீர் குடியாமல் விரட்டினவன், பசித்து வந்தவர்களுக்கு உண்டானதைப்பகுந்து சாப்பிடச் சொல்லாதவன், எல்லாருஞ் சேதுவில் தீர்த்த மாடின போதே புண்ணிய புருஷர்களென்று வேதசாஸ்திரங்களாலே சொல்லப்படுகிறது. பின்னும் அக்கினி கோத்திரத்தின் வேள்விகளுக்கு விகாதம் பண்ணினவன், தேவர் சொத்துக்கள் ஸ்திரீ சொத்துக்கள் வெறிபிடித்தவன் சொத்துகள் அகதிகளுடைய சொத்துக்கள் தாசிகளுடைய சொத்துள் இவைகளை அபகரித்து விற்றுச்சாப்பிட்டவன், சிவனுக்கும் விஷ்ணுவுக்கும் ஏற்பட்ட அற்புதமான கந்தமூல பதார்த்தஞ் சந்தனம் கஸ்தூரி பால் பழம் நெய் தினை சர்க்கரை தாம்பூலம் பொன் வெள்ளி தங்கம் முதலானவைகள் பாத்திரம் பட்டு பட்டாவளிகள் இவைகளை அபகரித்துக் கொண்டவன், பெண்சாதிகூடப் பிறந்தவள்,

சிநேகிதனுடைய பெண்சாதி, மகன் பெண்சாதி, தூரஸ்திரீ, ஈனசாதிகள், பிறனுடைய ஸ்திரீ, குருபத்தினி, தமயன் பெண்சாதி, மாமியார், பிராமணஸ்திரீகளைச்சேர்ந்து தேய்ந்தவன், மதுபானஞ்செய்தவன் பாவங்களெல்லாம் ஸ்நானம்பண்ணினவுடனே பஞ்சுகளாய்விடுபட்டு ஓடிப்போய்விடும், மேலும் நாகலோகம் அக்கினிலோகம்பூலோகமுதலான ராச்சியபாரங்களும் வேண்டிய பேர்களும் பொன் பூமி ஆடையாபரணங்களும் பூஷணாதிகளும் தனகனவஸ்து வாகனங்களும் நிதிநிட்சேபங்களும் அஷ்டஐசுவரியங்களும் பெருந்தவம் தானநேமம் நிஷ்டை பூசை முதலானவைகளும் சரியை கிரியை யோக ஞானமுதலானவைகளும் வேண்டிய பேர்களும் சேதுவில் ஸ்நானம்பண்ணினவுடனே அவற்றையடைவார்கள்.

பின்னும் இராமசேதுவில் ஸ்நானம் பண்ணுகிறதற்குமனதுடையவர்கள் பொன், பூமி, அரிசி, காய்கறி பதார்த்தங்கள், கோதானம், கன்னிகாதானம், வஸ்திரதானஞ்செய்து புராண சிரவணம்செய்து வேள்விமுடித்து சேதுஸ்நானஞ் செய்தால் அவர்களுடைய புண்ணியம் யாராலுஞ்சொல்ல முடியாது. அவர்கள் புண்ணியசாலிகள். அதிலும் மனங்களில் யாதொரு தீங்குகளையும் நினையாமல் சேதுவில் ஸ்நானம்பண்ணின புண்ணிய புருஷர்களுடைய பலன்களை நாம் ஒரு விதத்திலுஞ் சொல்லத் தக்கதில்லை. பூலோகவாழ்க்கைகளையும் ராச்சியபாரம் பட்டாபிஷேகங்களையும் வேண்டிய போகங்களையும் தெய்வலோக வாழ்க்கைகளையும் இரம்பா ஸ்திரீகளுடைய போகபாக்கியங்களையும் வேண்டியபேர்கள் வைகுண்டம் கைலாசம் முதலான இடங்களில் சாலோக சாமீப சாரூப சாயுட்சியபதங்களை வேண்டியபேர்களுஞ் சேதுவில் ஸ்நானம்பண்ணினால் அவர்கள் அவர்களிஷ்டப்படியே இந்தச்சேது சித்தமாகக் கொடுக்கும். அவர்கள் செய்த தீங்கான பாவங்களையும் போக்கும். அவர்கள் மனதுக்கு மேலான இன்பங்களையும் கொடுக்கும். சகலமான விரதங்களிலுஞ் சகலமான நோன்புகளிலுஞ் சகலமான தீர்த்தங்களிலும் சகலமான ஸ்தலதெரிசனங்களிலும் சகலமான யோகங்களிலும் நூறுகோடி பங்கு அதிகம் இந்தச்சேதுவிலே ஸ்நானம்பண்ணினபேர்கள்சித்தமாயடைவர், செல்வங்கள் ஆயுள்கள் வித்தைகள் வேதங்கள் மந்திரங்கள் அஷ்டமாசித்திகள் கைகூடி வரவேண்டிய பேர்கள் சேதுஸ்நா

னத்தை முக்கியமாய் நிறைவேற்றிக்கொண்டு வருவார்கள். அவரவர்கள் நம்பி முழுகினாலும் மனமில்லாதவர்களாய் முழுகினாலும் மேன்மையும் அவரவர் நினைத்தபடி சுகமுமடைந்து மறுமையிலுமப்படியே யிருப்பார்கள். பூரணச்சந்திரனைப்போல தேகமும் குபேரனைப்போல பாக்கியமும் தர்மங்களும் காமதேநு கற்பகவிருட்சங்களுஞ் சுரபி சிந்தாமணி பதுமபீடங்களும் உண்டாகும். பெரியோர்களிடத்தில் பொருள்வாங்கிப் போனாலும் அவர்கள் கொடுத்தாலும் அவர்களுக்குக் கிடைக்கிற பலன் பேர்பாதியாகக்கிடைக்கும். அப்படிச் சேது ஸ்நானத்துக்குப் போய்வரவேண்டிய பேர்கள்கையில் பொருளில்லாதுபோனால் நல்ல பிராமணர் பெரியோர்களிடத்தில் கேட்டு அவர்கள் கொடாதுபோனால் வைசியர்கள் கையில் வாங்கிப்போகவேண்டும். அவர்கள் கொடாதேபோனால் க்ஷத்திரியரிடத்தில் கேட்டு வாங்கிக் கொண்டு போகவேண்டும். பசும்பொன், பதார்த்தம், பட்டு வஸ்திரம்,, நவதானியம், அரிசி, காய்கறிபதார்த்த முதலானவைகள் தங்கள் தங்களாலே இயன்றமட்டுங் கொடுத்து துளசிதளம் வாங்கிக் கொண்டு சேதுவிலே தீர்த்தமாடச்சொல்லி ஒருவனை அனுப்புவித்து புண்ணிய புருஷர்களுக்கு வேதசாஸ்திர புராணங்களில் சொல்லுகிறபடி அஸ்வமேதயாகம் பண்ணின பலன்களுந் துலாபாரம் பசும்பொன் கொடுத்தபலன்களும் கொடுத்தவர்களுக்கும் வாங்கிப்போனவர்களுக்கும் கிடைக்கிறது. அல்லாமல் அவரவர் செய்த பாவங்களும் வேரோடு எடுபட்டும்போம். சேதுவிலே தீர்த்தமாடவேணுமென்கிற ஆசையுடையவன் தீர்த்தமாடப்போகு முன்னே மரணமாகிப் போய்விட்டால் அவன் தீர்த்தமாடினபலனை யடைந்து மேலான புண்ணியலோகங்களை அடைவான். மறுபடியுந் ஜெனனமாகிச் சேதுக்கரையிலே எப்போதும் வாசம்பண்ணிக்கொண்டிருந்து பிரதிதினமும் ஸ்நானம்பண்ணி மனமகிழ்ந்துகொண் டிருப்பான்.

யாராவது ஒருவன் சேதுவிலே ஸ்நானம் பண்ணிவரச் சொல்லிப் போய் வந்தவுடனே கொடுக்கிறேனென்று சொன்ன பொருளைக் கொடாதேபோனால் அவனைப் பிரமஹத்தி பண்ணின பஞ்சமா பாதகமென்று அறிவுடைய பெரியோர்கள் சொல்லுவார்கள். மேலுமிந்தச் சேதுவிலே மாதுர் நிந்தனை பிதுர் நிந்தனை குருநிந்தனைகள் பண்ணின பாவிகளும் அவர்களைக்கொன்ற பாவிகளுங்

ஷி என்று நம்பி வந்தவர்களைக் கைவிட்ட பாவிகளுந் தெய்வப் பிராமணர், பசுக்களை அடித்தவர்களும் உதாசினம் பேசினபாவிகளுஞ் சாமகாலங்களிலே அன்னம்பருந்து கொடுத்துச் சாப்பிடச்செய்தவர்களை உதாசனம் பேசினபாவிகளும், கோடைக்காலங்களிலே மாஞ் செடி பூடுகளுக்குத் தண்ணீர்விடாத பாவிகளுங் குளங்கள் வெட்டினதைத் தூர்த்தபாவிகளுஞ் சாலையை வெட்டியுந் தண்ணீர்ப் பந்தலைக் கெடுத்துஞ் சத்திரங்களை அழித்தும் கோவில் குளங்களை இடித்துஞ் சாமித்துரோகம் குருத்துரோகஞ் செய்கிற பாவிகளும், தேவாலயங்களில் ஸ்திரீகளுடன் கூடியிருந்த பாவிகளும், தன் பர்த்தாவுக்குமுந்திச் சாப்பிட்டு மூந்தி நித்திரைபண்ணியும், நிருவாண மாயிருந்து குளித்தும், வாயிலே தாம்பூலம்போட்டுப் புருஷனுக்கு பணிவிடைசெய்தும், எதிராகஇருந்து பேசினவர்களும், புருஷன் சொல் தட்டி நடந்தவர்களும், பரபுருஷர்களைக் காப்பாற்றித் தன்புருஷனை நிராகரித்து நடக்கிற பாவியான ஸ்திரீகளுந் தாயார் தகப்பனாரை சம்ரக்ஷணை செய்யாமல் பெண்டீர்களைச் சம்ரக்ஷணை செய்தும் பெரியவர்களை உதாசனம்பேசியும் அடித்தும் தீபமில்லாமல் சாப்பிட்டும் சாஸ்திரநிந்தனை புராணநிந்தனை செய்த பாவிகளும், பசுமாடுகளைச் சம்ரட்சணை செய்யாமல் பால்கறந்து குடித்த பாவிகளும், புண்ணிய கதைகளைக் கேளாத செவியை யுடைய மூடர்களுந் தேவ விருட்சங்களை வெட்டியும் ஆலயங்களை இடித்தும் கண்மாய் குளங்களைத் தண்ணீரில்லாமல் வெட்டியும் கஞ்சா அபின்களைச் சாப்பிட்டும்,மாமியார் வீட்டில் குடியிருந்துஞ் சாப்பிட்டும்,அந்தச் சொத்துக்களை அபகரித்துப் பொசிக்கப்பட்ட பாவிகளும் இவர்களெல்லாரும் இந்தச் சேதுவைக் கண்டாலுந் தீர்த்தமாடினாலுந் திவலைமேலே தெரித்தாலும் புண்ணிய புருஷராகி விடுவார்கள். தங்கள் வயசிலே சோரநாயகனுடனே கூடி அனுபவித்து சிசுக்களைச் சொந்தநாயகனறியாமல் வதைசெய்கிற ஸ்திரீகளைப் பஞ்சமாபாதகி யென்று பெரியோர்கள் சொல்லுவார்கள். அப்படிக்கொத்த பாதகரைத் தேவாதிகள் தங்களைக் கொன்ற பாவிகளென்றும் அஞ்சுவார்கள். மூன்று லோகமு மப்படியே சொல்லும். சேதுஸ்நானத்திற்குப் போகவேணுமென்று ஒருவன்கையி லொருவன் பொருள்வாங்கிக் கொண்டுபோகாமலிருந்துவிட்டா லவனைப் பஞ்சமாபாதகனிலும் பாதகனென்றும் நீசனிலும் நீசனென்றும் தேவசுருதிகளினாலே சொல்லப்பட்டிருக்கிறது. அவர்களும் எந்தவகையினாலாவது என்ன பிராயாசைப்பட்டா

வது சேதுவில் ஸ்நானம் பண்ணவேணும். இல்லாவிட்டால் சேதுவி
ற்குப் போகச் சொல்லவேணும், அதற்குச் சக்தியில்லாத பேர்கள்
வேண்டிய பதார்த்தங்களைக் கொடுத்து நல்ல யோக்கியமான பிராம
ணனைப் போகச்சொல்லவேணும். அப்படிப் போகச் சொல்வதற்குத்
தன்னிடத்தில் பொருளில்லாவிட்டால் யாரிடத்திலாவது வாங்கிக்
கொடுத்துப் போகச்சொல்லவேணும். மேலும் யாகங்கள், எக்கியங்க
ள் முதலான வற்றிற்கு மாத்திரம் யாரிடத்திலாவது பொருள் வாங்கி
நடப்பிக்கலாமென்று வேதவாக்கியம் சொல்லப்பட்டிருக்கிறது. சே
துவுக்குப் போகிறபேர்கள் நீசரிடத்திலாவது பொருளை வாங்கிக்
கொண்டுபோனால் அவர்கள் புண்ணிய புருஷராவார்கள். இந்தச்சே
து கிரேதாயுகத்தில் ஞானசொரூபமாக இருந்து யாவருக்கும் மோ
ட்ச சாம்பிராச்சியத்தைக் கொடுத்துந் திரேதாயுகத்தில் தேவ சொ
ரூபமாக இருந்து மேலான புண்ணியலோகங்களைக் கொடுத்துந்
துவாபரயுகத்தில் ஈஸ்வரசொரூபமா யிருந்து சக்கரவர்த்தி முதலா
கிய பேர்களுக்குச் சாம்பிராச்சிய பட்டாபிஷேகங்களைக் கொடுத்துங்
கலியுகத்தில் சேதுசொரூபமாக இருந்து அவரவர் நினைத்த கா
ரியங்களைக் கொடுத்துக்கொண்டு மிருக்கிறது. அதின் மகிமைகளை
நம்மால் சொல்லமுடியாது. தெரிந்தமாத்திரஞ் சுருக்கமாக உங்களுக்
குச்சொன்னேமென்று சூதமகாரிஷி சொல்ல, நைமிசாரண்யத்து
ரிஷிகள் கேட்டு ஆனந்த சந்தோஷ ஆச்சரியங்களை யடைந்து இப்
படிக் கொத்த சேதுவை ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியாகிய சுவாமி
கள் என்னகாரணத்தினால் உண்டாக்கினாரென்று ரிஷிகள் கேட்கச்
சூதமாமுனிவர் சொல்லத் தொடங்கினார்:

சேதுபலமகத்துவம்-முற்றிற்று.



உ

கடவுள் துணை.



# சேதுபந்தன மகத்துவம்.



கோசலதேசத்தை யாளப்பட்ட தசரதமகாராஜா அறுபதினாயிரம் வருஷந் துரைத்தனம் பண்ணி அறுபதினாயிரம் ஸ்திரீகளைக் கலியாணம் பண்ணிக் கொண்டு அயோத்தியா புரியிலே இருக்கிறபோது, தனக்குப் பிள்ளையில்லையென்று கலைக்கோட்டு மகாரிஷியை அழைத்து புத்திரகாமேஷ்டி யாகஞ்செய்து பிண்டங்கள் அமர்த்திக் கொடுக்க கோசலாதேவி சுமித்திராதேவி கைகேசிதேவி யிவர்கள் வயிற்றில் ஸ்ரீவைகுண்ட வாசகராகிய ஸ்ரீமந்நாராயணமூர்த்தியும் ஆதிசேஷனும் சங்கு சக்கரங்களும் ஸ்ரீராமமூர்த்தியாகவும், லட்சுமணராகவும், பரதசத்துருக்கராகவும் பிறந்து வளர்ந்து பரிபாலனமாகி வித்தைகள் அப்பியாசம் பண்ணி சௌள உபநயன முதலானவை நடத்தப்பெற்று ஆனையேற்றங் குதிரையேற்றம் வில்பரிட்சை முதலான தனுசாஸ்திரங்களும் படித்து சமர்த்தராகஇருக்கும் போது விஸ்வாமித்திரர் யாகம் வளர்க்க வேண்டியதாய் வந்து தசரத மகாராஜாவிடத்தில் ராமர் லட்சுமணர்களைக் கேட்டு ராமலட்சுமணரிரண்டு பேரையும் வசிஷ்டர் வாக்கியந்தப்பாமல் தசரதருங்கூட்டி அனுப்புவிக்க அவர்களைக் கூட்டிக் கொண்டு வந்து யாகத்தை அழித்துப் போடாமல் அஸ்திரங்களினாலே சரங்கட்டி வில்லாளிகளினாலே சரக்கூடங்கட்டி வில்லாளிகளாயிருந்த இரண்டு பேரையுங் காத்துக்கொண்டிருக்கும்படி செய்து யாகம் வளர்க்கிறபோது தாடகை முதலான பேர்கள் வந்து அநேக இமசைகள் செய்ததினால் அவர்களையுஞ் சங்காரம் செய்து விஸ்வாமித்திரர் யாகத்தை நிறைவேற்றிப் பூரணாகுதி செய்து இந்திராதி தேவர்கள் ரிஷிகள் முதலாய் அநேக வரப்பிரசாதங்களும் அஸ்திர சஸ்திர பாணங்களும்

பெற்றுக் கொண்டு விஸ்வாமித்திரர் பின்னாலே வருகிறபோது கருங் கல்லாய் கௌதமரிஷி சாபத்தினாலே கிடந்த அகலிகை ஸ்ரீராமசுவாமியினுடைய பாதம் பட்டவுடன் பெண் சொரூப மடைந்து எழுந்து வணங்கினாள். அவளைக் கௌதமரிஷியினிடத்திற்கு அனுப்பிவைத்து விட்டு, சாபங்கரிஷி ஆச்சிரமத்துக்கு வந்து அவரையும் நமஸ்கரித் துக் கொண்டு மிதிலாபுரிக்கு வந்து ஜனகமகாராஜனிடத்தில் விஸ்வா மித்திரர் பரீக்ஷை செய்ய சீதையுடனே வரப்பிர சாதமாய்ப் பிறந்தி ருக்கிற வில்லை முறித்து தசரத மகாராஜா முதலாகிய சகலரையும் வரவழைத்து சீதாலட்சுமி முதலான பேர்களை ஸ்ரீராமச்சந்திரர் முத லான நாலு பேர்களுக்குங் கலியாணம் பண்ணிக் கொண்டு மிதிலா புரிப்பட்டணம்விட் டயோத்திக்கு வருகிறபோது பரசுராமருடைய பலத்தையும் கைவில்லையும் வாங்கிக் கொண்டு அயோத்தியாபுரி பட் டணம் வந்து சேர்ந்தார்கள்.

அப்படி யிருக்கிறபோது தசரத மகாராசாவானவர் வசிஷ்டரு டனே யோசனைபண்ணி ஸ்ரீராமருக்குப் பட்டாபிஷேகஞ்செய்ய எத் தனிக்கிறபோது கைகேசி வார்த்தையைக் கேட்டுக் கொண்டு பரத னுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வதாய் ஸ்ரீராமனை வனத்திற்குப் போகச் சொன்னதினாலே ஸ்ரீராமரும் லட்சுமணரும் சீதாதேவி யும்அயோத்தியா புரிப் பட்டணத்தைவிட்டு சித்திரகூட பருவதம்வந் து கங்காநதி தாண்ட வேண்டியதற்கு குகனென்கிற வேடனையுஞ் சிநேகிதங் கொண்டு ஓடமேறி சித்திரகூடம் வந்து சேர்ந்தனர். தசரதமகாராசாவும்புத்திரசோகத்தினாலே மரணத்தையடைந்தார். பரதனுஞ் சத்துருக்கனுந் தசரதரையெடுத் தடக்கஞ் செய்துவிட்டு, அண்ணனிருக்கும் சித்திரகூடம் வந்து சேர்ந்து ஸ்ரீராம சுவாமியால் தசரதமகாராசாவுக்குச் செய்ய வேண்டிய கிரியைகளைச் செய்து ராம பிரானுடைய உத்தரவுப்படி அயோத்தி வந்து சேர்ந்து சத்துருக்க மகாராசாவை அயோத்தியா நகரத்தையாளும்படி செய்து, பரதமகா ராசன் நந்திக் கிராமத்தில் ஸ்ரீராம சுவாமியின் சேவடியாகிய பாது கையைப் பூசித்துவந்தார். ஸ்ரீராமலட்சுமணர்களுஞ் சீதாதேவியும்சித் திரகூடபருவதம் விட்டுப் புறப்பட்டு வனத்தை நோக்கி வந்தார்கள். காகாசுரனென்னப்பட்ட ராட்சதன் வந்து சீதாதேவியை யெடுத்துக் கொண்டுபோனதினால் அவனைச் செயித்துச் சீதையைவிடுவித்துக்கொ ண்டு அகஸ்தியர் முதலான மகாரிஷிகளுடைய ஆச்சிரமங்களெல்லா

ங்கண்டு தெரிசித்து அநேக வரப்பிர சாதங்களும் அநேக ஆயுதங்க ளும் பெற்றுக்கொண்டு வனமெல்லாஞ் சஞ்சாரம் பண்ணிக்கொண்டு பஞ்சவடி தீர்த்தக் கரையில் பன்னகசாலை கட்டிக்கொண்டு சீதாதே வியும் லட்சுமணரும் ஏவல் பணிவிடைகள் செய்ய இராமசுவாமி இவ்விதமாயிருக்கிறபோது, சூர்ப்ப நகை வந்து ராம லக்ஷ்மணர்களு டனே சம்வாதம்பண்ணி மூக்கும் தனமும் அறுப்புண்டு காதூஷண திரிசிரரிடத்திற் போய்ச் சொல்ல அவர்களும் ஆயுதபாணிகளாய் வ ந்து எதிர்த்து இராமச்சந்திர மூர்த்திகையினாலே மடிந்து போனார்க ள். அப்பால் சூர்ப்ப நகை புறப்பட்டு இலங்கையில் போய்த் தன்னு டைய தமையனாகிய இராவணனிடத்தில் அநேகந் துர்ப்புத்திகளை யுஞ் சீதையினுடைய அழகுகளையுஞ் சொல்ல அதையவன் கேட்டு தன்னுடைய மாமனாகிய மாரீசனை மான்வடிவமாக முன்னிட்டுக் கொண்டு பஞ்சவடி தீர்த்தக் கரையிலே மாருக சீதாதேவி முன்னே விளையாடிக் கொண்டு நிற்கச் சீதை அம் மானைப் பிடித்துத் தரச்சொ ல்ல ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியும் வில்லும், அம்புமெடுத்துக் கொண்டு மானைத்துரத்திப் பிடிக்கக் கூடாமையால் ஓரம்பினாலெய்ய மான்விழு கிறபோது ஓ லக்ஷ்மணாவென்று அலறி அபயமிட ஸ்ரீராமர் சத்தம் போலே மாய்கையினாலே மாரீசன்செய்ய அப்படிவிழுந்தசத்தத்தை லட்சுமணர் கேட்டு ராட்சசமாய்கையினால் தமையனுக்கு மோசம் வ ந்ததென்று ஆயுதபாணியாகச் சீதை சொற்படிக்கு வனத்தை நோ க்கிப்போய்விட்டார். அப்போது இராவணசன்னாசியும் வந்துசீதையி ருக்கிற பன்னகசாலை வாசலிலே பிச்சை கேட்கச் சீதையம்மனும் பிச்சைகொண்டுவந்தாள். உடனே பூமியோடேபேர்த்தெடுத்துத்தே ரின்பேரில்வைத்துக்கொண்டு மாய்கையாய் இலங்கையை நோக்கி வரும்போது சடாயு வந்து எதிர்த்தார். அவரை உபாயதந்திரங்க ளினாலேஇராவணன் கொன்றுவிட்டுப் போகிறபோது சீதையுந்தான் பூண்டிருந்தஆபரணங்களைக்கழட்டிக் கிஷ்கிந்தாமலைக்கருகாண்மையா யிருக்கப்பட்ட மதங்கிரி மலையில் போட்டு விட்டு மகாவிசனத்துடனே அபயமிட்டழுதாள். உடனே இராவணனும் அதிசீக்கிரமாக இலங்கை யிற்கொண்டு போய் அசோகவனத்திலே ராட்சச ஸ்திரீகளைக் காவல் வைத்துத்தன்னைச் சேரும்படிக்குப் போதனை செய்யச்சொல்லிஇலங் கைக்குப் போனான். சீதையும் அந்த வனத்தில் மகா விசனத்துடனே ஸ்ரீராமஸ்மரணை பண்ணிக் கொண்டிருந்தாள்.

அப்பால் அந்த வனத்திலே மான்பிறகே போயிருந்த சுவாமியு
மவரைத்தேடிப்போன லட்சுமணரும் பன்னசாலையிலே வந்து பார்
த்து சீதையம்மனைக் காணாமல் அந்த வனமெல்லாம் தேடிக் கொண்டு
வருகிற போது சடாயுவானவர் குற்றுயிருடனேயிருந்ததைக் கண்டு
ஸ்ரீராம சுவாமியும் லட்சுமணரும் மகா விசனத்தையடைந்து அவரா
லே சீதையம்மனை இராவணன் இலங்கைக்குக் கொண்டுபோயிருக்கி
றதைத் தெரிந்துகொண்டார்கள். உடனே ஜடாயுமரணமானார். அவ
ரையெடுத் தகனஞ் செய்து விட்டு, வனத்தில் வருகிறபோது கபந்த
னென்னு மிராட்சதனைச் சங்கரித்து சபரியம்மனை வைகுண்டத்திற்
கனுப்பிவைத்துக் கிஷ்கிந்தாமலைக் கருகாண்மையாய் வருகிறபோது
பம்பை யாற்றங்கரையில் ஒரு மரத்தடியில் அனுமார் நின்றார். நின்ற
வர் அவர்களைக் கண்டு கிட்டவந்து இவர்களுடைய முகவாட்டங்களை
ப்பார்த்து நீங்களார்? எங்கேயிருந்து வந்தீர்கள்? எங்கேபோகிறீர்களெ
ன்று கேட்க, அப்போது ஸ்ரீராமசுவாமியும் லட்சுமணரும் நடந்தகா
ரியமெல்லாம் ஆதியோடந்தமாகச் சொல்லி அனுமானுடைய காதில்
கிடந்த கவசகுண்டலத்தையுங் கண்டு ஆச்சரியமடைந்தார்களப்போ
தனுமாரையுஞ் சுவாமிகளுக்கு உண்மையாகிய பேர்களையும் வானரச்
சேனையையும் நட்புக் கொண்டு வாலியையுங் கொன்று துந்துபியெலு
ம்பையும் மராமரத்தையுந்தவிடு பொடியாகச் செய்து சுக்கிரீவனுக்குத்
தாரையைச்சேர்ப்பித்து கிஷ்கிந்தாபுரியைப் பட்டாபிஷேகஞ்செய்து
வானராதிகளை சாற்காலங் கழித்தவுடன் வரும்படி கூறி அனுமார்
முதலான படைத் தலைவர்களையுங் கூட்டிக் கொண்டுபோய்ச் சீதைய
ம்மனைத் தேடிவரும்படி அனுமாரிடம் திருவாழி மோதிரமுங் கொடு
த்து அனுப்பி வைத்தார்.

அனுமாரும் வானராதிகளுடனே புறப்பட்டு அனேகங்கள் மலை
ளெல்லாந்தேடி அம்மனைக் காணாமல் மகேந்திரகிரி பருவதம் வந்து
சேர்ந்து சம்பாதியை நட்புக்கொண்டு அவர்சொற்படி அனுமார்
விஸ்வரூபங் கொண்டு மகேந்திரபருவதத்திலேறிக் குதித்து இலங்கை
மாகாளியைக்கொன்று இராட்சதர்களையும் அட்சயகுமாரனையும் சம்
புமாலியையும் பஞ்சசேனாபதிகளையும் கொன்று சீதாதேவியம்ம
னைக்கண்டு திருவாழிமோதிரங் கொடுத்து அப்பால் இந்திரஜித்தினால்
பிடிபட்டு இராவணனைச் சந்தித்து அவனால் வாலில் தீயைக்கொளுத்
தப்பட்டு அக்கினியினால் வாலைப் பிடித்துக் கொண்டு எரிகிற தீயை

இலங்கைப்பட்டணம் எழுநூற்றுக் காதவழியைக் கொளுத்திச் சீதாதேவியம்மன் கொடுத்த சூடாமணியுங் கொண்டு மகேந்திரகிரி பருவதம்வந்துசேர்ந்து வானராதிகளுடன் ஸ்ரீராமசுவாமியைக்கிஷ்கிந்தையிற்கண்டுவணங்கிச் சூடாமணியைக்கையிற் கொடுத்தார். ஸ்ரீராமரும் அனுமார்பேரில் மகா சந்தோஷத்தையடைந்து வானராதிகள் சுக்ரீவன் முதலாகிய படைத்தலைவர்களுடன் புறப்பட்டு கிஷ்கிந்தா மலையைவிட்டு வாவிகுண்டம் திருப்பதிமலைமார்க்கமாய் மகேந்திரகிரி வந்துசேர்ந்து அதன்சாரலிலிருக்கிற கங்காதீர்த்தத்துக் கருகாண்மையாய்த் தென்சமுத்திரக்கரையி லெழுந்தருளியிருந்தார். அப்படியிருக்கிறபோது இலங்கைநகரத்தில் அனுமார் தீயைக்கொளுத்திவிட்டு வந்ததின்பிறகு இராவணனுடைய தம்பியாகிய விபீஷணன் தமையனுக்கு அநேகவிதமாகிய புத்திகள்சொல்லி ஸ்ரீராமசுவாமியிடத்தில் சீதாதேவியைக் கூட்டிக்கொண்டுபோய் விடும்படி சொல்லியும் இராவணன் கேளாததினால் மகாஞானியான விபீஷணன் பின்வரும் காரணங்களை அறிந்துகொண்டு இராவணனை வெறுத்துவிட்டு நாலுமந்திரிமார்களுடனே இலங்கையைவிட்டுப் புறப்பட்டு ஸ்ரீராமச்சந்திரமூர்த்தி பாதத்தில் சரணாகதி யடைந்து அடைக்கலம்புகுந்தான்.

ஸ்ரீராமரும் லட்சுமணப்பெருமாளும் சுக்ரீவன் அனுமார் சாம்புவந்தர் முதலானபேர்களுடன் யோசனை செய்துகொண்டு க்ஷத்திரிய தர்மப்பிரகாரம் விபீஷணனை அடைக்கலங் கொண்டு உடனே இலங்காபுரியின் அரசாட்சியைப் பட்டாபிஷேகஞ்சூட்டிக் கிரீடமுந் தரித்து விபீஷணன் முதலான பேர்களால் இலங்கையின் வர்த்தமானங்களையெல்லாம் ஸ்ரீராமர்கேட்டு யோசனை செய்துகொண்டு மானிடசென்மமாய்ப் பூமியில்பிறந்து விண்டு க்ஷத்திரியதர்மப்பிரகாரம் நடக்கவேணுமேதவிர தெய்வநிர்ணயங்களைச் செலுத்தக்கூடாதென்று யோசித்து இந்தச் சமுத்திரத்தைக் கடந்து இலங்கைக்கு எப்படிப் போகலாம். ஒருவழியாய்ப் போய்ச் சேர்ந்தாலும் வானரப்படைகள் எழுபத்திரண்டுவெள்ளமும் போய்ச்சேரவேணும். இதற்கென்ன யோசனை யென்று நானாவிதங்களாக யோசித்துக்கொண்டு மகா துயரத்தை யடைந்து நமக்குத் தகப்பன் மரணமாய்ப் போய் தாய்மார்கள் அமங்கலிய மடைந்தும் இராச்சியத்தைவிட்டுப்பிரிந்துஞ் சீதையைப்பற்றி யேற்பட்ட விசனம் மகாதுக்கமாகநேரிட்டது. இந்தச் சமுத்திரத்தைக்கடந்து இலங்கைக்குப்போய் இராவணனைக்

கொன்றுசீதையைமீட்டு வருகிறதானால் அகஸ்தியமகாமுனி சொல்
லிய வாக்குந் தப்பிப்போமா? அவர்வாக்குப்படியே கந்தமாதனத்
தில் ராவணனைக்கொன்ற தோஷந்தீரச் சிவபூஜைபண்ணாமற் போ
வோமா வென்று வெகுவிதங்களாக யோசனைபண்ணுகிறபோது
விபீஷணன் சொல்லுவான்:

சுவாமி! இலங்கைக்குப் போகவேணுமானால் வானராதிகளால்
சமுத்திரத்திற்கு அணைகட்டி அப்பாலதின்மேல் நடந்துபோக
வேணுமென்று சொல்ல, சுவாமியும் அந்தவார்த்தையை ஒப்புக்கொ
ண்டு சமுத்திர ஆழமறிந்து அணைகட்ட வேணுமென்று வருண
னைநோக்கி ஏழுநாள் தெர்ப்பாசனத்தில் வருண மந்திரத்தைத் தியா
னித்துக்கொண்டிருந்தார். அதையறிந்து வருணன் வராதது கண்டு
நிமிஷத்தில் சுவாமிக்குக் கோபம்வந்து ராமபாணத்தைப் பிரயோ
கஞ்செய்தார். வருணனும் பயந்து சரணாகதியடைந்துதோத்திரஞ்
செய்தான். சுவாமி தயவுவந்து இந்தச் சமுத்திர ஆழமும் இலங்
கைக்குப்போக நிகளமும் என்னவென்றுகேட்டு, அணைகட்ட வேண்
டியதையுஞ் சொல்ல, வருணன்கேட்டு சுவாமியிடத்தி லிருந்து இல
ங்கைக்கு நூறு யோசனை தூரமிருக்கிறது. ஆழங் காணக் கூடாது.
அணைபோடவேண்டுமானால் போட்டகல் மிதக்கும்படியாய் வரப்பிர
சாதங்களினாற் பிறந்திருக்கிறான். வானரப்படைத் தலைவரில் நளனெ
ன்னும் ஒருவன் சுவாமிகள் கூடவே வந்திருக்கிறான். அவன் பூர்வ
ஜென்மத்தில் மயனாகிய சிற்பனாக்கும். அவனுக்குஉத்தரவு கொடுத்து
வானரப்படைகளால் ஒத்தாசைசெய்தால் அவனும் கட்டுவானென்று
சொல்ல, சுவாமியும் அவனையழைத்து வெகுமானஞ்செய்துநீ தண்ணீ
ரில் போட்ட கல் மிதக்கும்படி உன்னுடையதகப்பன் வரம் பெற்ற
வனானபடியா லனுமார் முதலிய வானரவீரர்கள் கொண்டு வந்து
கொடுக்கிற மலைகளை வாங்கி குடக்கையினால் இலங்கைக்குப் போம்
படி வருணனுடைய முதுகின் பேரில் அணைகட்டென்று ஸ்ரீராம
சுவாமி வரப்பிரசாதங்கொடுத்து யாதொரு விக்கினங்களும் வாராமல்
நிறைவேற்றும்படிக்கு விக்கினேஸ்வர பூஜைசெய்து அனுக்கிரகம்
பெற்றுக்கொண்டு, அப்பால் நவக்கிரகங்களையும் விதிப்படி நவபா
ஷாண ஸ்தாபிதஞ்செய்து பிரயாண பிரதிஷ்டைகளைச் செய்து
அப்பால் சனிப்பிரீதியாய் எள்ளையெடுத்து சிவப்பிரதிஷ்டை செய்துதி
லதீஸ்வரரைப் பூஜைசெய்து இவர்களுடைய அனுக்கிரகங்களை யெல்
லாம் பெற்றுக்கொண்டு நளனுக்குச் சேதுபந்தனத்துக்குத் தேங்காய்

தொட்டுக் கொடுத்து அனுமார் முதலான பெரியோர்களான படைத் தலைவரையும் வானரப் படைகளையும் நாலுதிக்குகளிலேயும் போய் பருவதங்களைக் கொண்டு வந்து கொடுக்கும்படி உத்தரவு கொடுக்க ஸ்ரீராமருடைய வாக்கியப்படி வானராதிகளெல்லாம் பருவ தங்களை அளவுசங்கையில்லாமல் கொண்டுவந்து மேலுமேலுங்கொ டுக்க ஸ்ரீராமசுவாமியும் இலட்சுமணரும் ஜெயம் ஜெயமென்று வாக் குக்கொடுக்க நளனனவன் வாங்கிக்கட்டின திருவணையானது நவபா ஷாண முதல் தெர்ப்பசயனம் மத்தியாக புல்லாரண்யம் கடைசியாய் ஈசான்ய அக்கினி திக்கு அளவாய்ப் பத்துயோசனை விஸ்திரணம் அகலமும் அதிலிருந்து அக்கினி திசை பிரவேசமாய் தெற்கு முக மாய் இலங்கையை நோக்கி பவளமால்மலை வரைக்கும் நூறுயோ சனை நிகளஞ்செய்து சேதுபந்தன முடிவாயிற்று. அநேக நதிகள், சுனைகள், ரிஷிகள், சஞ்சாரஞ் செய்துக்கொண்டி ருந்த பருவதங்களை ஸ்ரீராமர் வாக்கியப் பிரகாரம் வானராதி களால் கொண்டுவந்து கொடுக்க நளன்வாங்கி அடைக்கிற போது சமுத்திரத்தைப் பார்க்க வந்த ஸ்ரீராமச் சந்திர மூர்த்தி நடக்கும்போது பட்ட பாதாரவிந்தங்களுடைய சங்கு, சக்கர ரேகைகள் சேதுவில் பிரகாசித்துக்கொண்டிருக்கும். அப் படியான பருவதங்கள் சங்கு சக்கரங்களில் அலைமோதி சத்தத் துடன் ஆடம்பரஞ்செய்து கெர்ச்சிதங்களைப் பண்ணி தென்சமுத் திரமானது மகா ஆனந்த சந்தோஷங்களை யடைந்துகொண்டிருக்கும் படி அலைமோதப்பட்ட சமுத்திர ஜலத்துக்கு சேது தீர்த்தமென்று பெயர். அநேக யுகங்களாய்ப் பிரகாசித்துக்கொண்டிருக்கிறது. இப்ப டிக்கொத்த சேதுவில் ஸ்நானம் பண்ணின பேர்களையுஞ் சேதுவைக் கண்ணால் கண்ட பேர்களையுஞ் சேதுவுடைய காற்றுப்பட்ட பேர் களையும் புண்ணிய புருஷர், புண்ணிய சாலிகள், கிருதார்த்தர்கள், மகா எக்கிய சாலிகளென்று வேதங்கள் முறையிட்டுக்கொண்டிருக் கின்றன. மேலும் இந்தச் சேதுவில் அநேக கோடானு கோடி தீர்த் தங்கள் மகா பாதகங்களைத் தீர்க்கும்படி வரப்பிரசாதங்கள் பெற்றன. அதிலும் முக்கியமாய் சக்கர தீர்த்தம், வேதாள தீர்த்தம், பாவநாச தீர்த்தம், சீதா குண்டம், மங்கல தீர்த்தம், அமுத தீர்த்தம், பிரம குண்டம், அனுமகுண்டம், அகஸ்திய தீர்த்தம், இராம தீர்த்தம், இலட்சுமண தீர்த்தம், ஜடாமகுட தீர்த்தம், இலட்சுமி தீர்த்தம்,

அக்கினி தீர்த்தம், முனிதீர்த்தம், சிவ தீர்த்தம், சங்க தீர்த்தம், கயா தீர்த்தம், கங்கா தீர்த்தம், யமுனை தீர்த்தம், கோடி தீர்த்தம், சாத்தியாமுத தீர்த்தம், சர்வ தீர்த்தம், தனுக்கோடி தீர்த்தம், பாலோடை தீர்த்தம், கபி தீர்த்தம், சாஸ்வதி தீர்த்தம், காயத்திரி தீர்த்தம், இரண விமோசன தீர்த்தம் ஆகிய இந்த இருபத்தொன்பது தீர்த்தமும் முக்கியமானவைகள். இவைகள் விசேஷமென்று சூதபுராணிகர் சொல்ல நைமிசாரணியத்து ரிஷிகள்கேட்டு ஆனந்த சந்தோஷ ஆச்சரியங்களை யடைந்து இப்படிக் கட்டின சேதுவிலே இந்த இருபத்தொன்பது தீர்த்தமும், ஆதிமுதன்மையாய் விளங்குகிற சக்கரதீர்த்தமும் வந்தகாரண மென்னவென்று ரிஷிகள் கேட்கச் சூதமாமுனிவர் சொல்லுகிறார்.

**சேதுபந்தனமகத்துவம் முற்றிற்று.**

---

உ

கடவுள் துணை.

## தருமபுஷ்கரணியென்ற சக்கர தீர்த்தமகத்துவம்.

---

முன்னொரு காலத்தில் காலவமகாரிஷி யாகப்பட்டவர் தேட்சணத்தில் புல்லாரண்ணியத்தில் பாலோடையென்ற மகாநதிக் கருகாண்மையாக மகா விஷ்ணுவை நோக்கித் தவசு பண்ணிக்கொண்டிருந்தார். அப்படித் தவசில் இருக்கப்பட்ட காலவ மகாரிஷியானவர் ஊணுறக்க மில்லாமல் பொறி புலன்களை யடக்கி வாய் மௌனங் கொண்டு சிந்தை யடக்கி வாயுவைப் பட்சணம் பண்ணிக்கொண்டு மழையோடு மழையாகவுங் காற்றோடு காற்றாகவும் நெருப்போடு நெருப்பாகவும் அஷ்டாக்ஷரங்களை இடைவிடாமல் தியானித்துக்கொண்டு தேவவருஷத்தில் ஆயிரவருஷந் தவசு பண்ணிக்கொண்டு இருக்கிறபோது மஹாவிஷ்ணுவானவர் கிருபைகூர்ந்து சங்கு சக்கர கெதாபாணியாய் மகரகுண்டல கேயூர பீதாம்பரதாரியாய் மகாலட்சுமி சமேதராய் கெருட வாகனரூடராய் எழுந்தருளி வைகுண்டலோகத்தைவிட்டுப் புறப்பட்டு புல்லாரண்ணிய க்ஷேத்திரத்தில் தவசு பண்ணிக்கொண்டிருக்கிற காலவமகாரிஷி முன்னாகவந்து காட்சி

கொடுத்தார். அப்போது ரிஷியுஞ் சந்தோஷமடைந்து தவசு விட்டிறங்கி வணங்கி நமஸ்காரம் பண்ணி ஆனந்தக் கூத்தாடிக் கைகொட்டி ஆனந்த பாவசங்களால் தோத்திரஞ்செய்தார். அப்போது மகாவிஷ்ணுவுஞ் சந்தோஷத்தை யடைந்து உமக்கு வேண்டிய வரங்கள் என்னவென்று கேட்கக்காலவ மகாமுனியுஞ் சொல்லுவார். சுவாமி! வேதவேதாந்த மூர்த்தி! தேவரீரைப் போலே அடியேனுஞ் சொரூபம் பெற்று வைகுண்டத்திலே எப்போதுஞ் சுவாமியுடைய சாரணாவிந்தத்தை நித்திய சுத்தபுரிபூரண பரமபாகவதருடனே வணங்கிக்கொண்டிருக்கும்படியாய் வரங்கொடுக்க வேண்டுமென்று கேட்டார். அப்போது ஸ்ரீமந்நாராயணமூர்த்தி சொல்லுவார். வாரும் காலவ மகாரிஷியே! நீர் ஒருவருங் கேளாத வரத்தைக் கேட்டீர். ஆகிலும் நாம் அந்தப்படியே வரங்கொடுக்க வேண்டுமானால் இந்தக்கர்மபூமியிலே இன்னம் பிராப்தம் நீர் அனுபவிக்கவேண்டி யிருப்பதினால் அந்தப் பிராப்தவினை தொலையும் படியாய் நீர் இப்போது தவசு பண்ணிக்கொண்டிருந்த விடத்துக்கு இன்னுஞ் சற்றே உத்தர பாரிசத்திலே தரும புஷ்கரணியென்று ஒரு தடாக மிருக்கிறது. அந்தத் தடாகம் இதற்கு முன்னொரு காலத்தில் தர்மதேவதையானது தான் சதாவாய் ஈஸ்வரனை நோக்கி இந்தக்ஷேத்திரத்தில் தவசுபண்ணிக்கொண்டிருக்கிறபோது ஈஸ்வரன் பார்வதி சமேதராய் மான்மழு சதுர்ப்புஜங் காளகண்ட திருநேத்திர சூலபாணியாய் சந்திர சடாதாரியாய் சிவ கணங்களுடனே தர்மதேவதை முன்பாகப் பிரத்தியட்சமாகி உனக்கு வேண்டிய வரப்பிரசாதம் என்னவென்று கேட்க, தருமதேவதையும் வணங்கித் தோத்திரஞ் செய்து சுவாமியை அடியேன் சுமந்து கொண்டு இருக்கவேண்டு மென்று வரங்கேட்க அப்போது பரமேஸ்வரனுஞ் சந்தோஷத்தை யடைந்து அந்த இடத்தி லொரு தடாகத்தைத் தெய்விகமாக உண்டு பண்ண அதில் தருமதேவதை ஸ்நானம் பண்ணி முன் சொரூபம் மறைந்து நந்தி சொரூபமாய் நாலுகாலும் வாலும் கொம்புகளுமாக வந்து முன்னே நின்றது. உடனே பரமேஸ்வரனும் அந்த ரிஷபவாகனத்தில் பார்வதி சமேதராய் எழுந்தருளி சகல தேவருக்குங் காட்சிகொடுத்து இந்தத் தடாகத்தில் தர்மதேவதை தீர்த்தமாடி ரிஷபமாய் வந்து நம்மைத் தரிசித்தபடியினால் இந்தத் தடாகத்துக்கு தர்ம புஷ்கரணியென்று நாமதேயஞ் சொல்லப்படும். இதில் ஸ்நானம் பண்ணின பேர்கள்

நினைத்தபடியே சொரூபத்தைப் பெறுவார்கள் என்று வாக்குக் கொ
டுத்து விட்டு சகல தேவதைகளுடனே கைலாசத்துக்குப் போய்
விட்டார். அன்றுமுதல் அந்தத் தடாகத்துக்குத் தருமபுஷ்கரணியெ
ன்று பேராய் தெய்வீகத்தையடைந்திருக்கிறது. அந்தத்தடாகத்தில்
போய்ஸ்நானம்பண்ணி சதாகாலமும் அதின்கரையில் தவசுபண்ணிக்
கொண்டிரும். அப்படிக்கு நீரிருந்தால் நம்மிட சொரூபத்தைப் பெற்
று வைகுண்டத்துக்கு வருவீர். அப்படி நீரிருந்து தவசு பண்ணிக்
கொண்டிருக்கும்போது உம்முடைய தவசுக்கு யாராவது விக்கினஞ்
செய்தாலுடனே நம்முடைய சக்கரம் வந்து அவர்களைச் சங்கரித்துப்
போடுமென்று வாக்குக் கொடுத்து காலவ மகாரிஷியிடஞ் சொல்லிக்
கொண்டு மகாவிஷ்ணுவும் வைகுண்டத்துக்கு எழுந்தருளிப் போ
ய்விட்டார். அவர் போனதின் பிறகு காலவமகாரிஷியும் உதயம் மத்தி
யானஞ் சாயங்காலம் மூன்று காலமுந் தருமபுஷ்கரணியில் தீர்த்தமா
டி அதன்கரையில் தன்னுடைய தேவபூசையாகிய சாளக்கிராமங்கள்
வைத்துப் பிரதிஷ்டை செய்து பூசை பண்ணிக் கொண்டு சங்கிரமஞ்
சஷ்டி, அஷ்டமி, சதுர்த்தசி, பவுரணை, அமாவாசை முதலாகிய பி
திர் தினங்களில் தர்ப்பண முதலாகிய கிரிகைகளும் நடத்தி வைத்
துக்கொண்டு தவசுபண்ணிக்கொண் டிருக்கிறபோது காலவ மகாரிஷி
யை ஒரு இராட்சதன் வந்து மாய்கையாய்க்கொண்டு தின்னப் பாய்ந்
தெடுத்தான். அப்போது காலவ மகாரிஷியும் மகாவிஷ்ணுவை நினைத்
தார். உடனே மகாவிஷ்ணுவுஞ் சக்கரத்தை ஏவினார். உடனே சக்கர
ம் வந்து அந்த ராட்சதனைச் சங்கரித்து விடக் காலவ மகாரிஷி
யுஞ் சந்தோஷத்தையடைந்து எப்போதும் இடைவிடாமல் காத்துக்
கொண்டிருக்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டார்.

அப்போதுசக்கரஞ்சொல்லும்: வாரும் மகாரிஷியே! ஸ்ரீமன்நாராய
ணமூர்த்தியினுடைய உத்தரவுப் பிரகாரம் நான் வந்து இராட்சதனை
ச்சங்கரித்து விட்டது சரியே. இனிமேல் உம்முடைய வேண்டு
தல் நிமித்தம் நான் வந்து இருக்க வேண்டுமானால் மகாவிஷ்ணுவினு
டைய உத்தரவுபெற்றுக் கொண்டு உம்மைவேண்டி வந்திருக்கிறேன்.
இப்போது நானிந்த இராட்சதனைக் கொன்ற பாவந்தீர எனக்கு
ஒருவகை சொல்லுமென்று சக்கரங் கேட்கக் காலவ மகாரிஷி சந்

தோஷத்தை யடைந்து இந்தத்தடாகத்திலே ஸ்நானம்பண்ணென்று சொல்ல உடனே சக்கரமும் ஸ்நானம் பண்ணத் தெய்வீகமாகத் தன்னுடைய தோஷந்தீர்ந்து பிரகாசமாய் விளங்கிக்கொண்டு சொல்லும்: நானிந்தத் தடாகத்தில் தீர்த்தமாடினபடியினால் இன்று முதல் சக்கர தீர்த்தமென்று பெயர் விளங்கிக்கொண்டிருக்கக்கடவதென்று வாக்குக் கொடுத்து இந்தத்தீர்த்தத்தில் யார்ஸ்நானம் பண்ணினாலும் அவர்களைப் பிடித்த பிர்மஹத்திகள், ஸ்திரீஹத்திகள், பேய் பிசாசு அலகை கூளி வேதாளங்களெல்லாம் விலகிப்போகக் கடவதென்று வாக்குக்கொடுத்து அந்தப்படியே பேரும் பிரதிஷ்டையும் விளங்கும்படி ஆசீர்வாதஞ்செய்து வாக்குக்கொடுக்கும்படி காலவ மகாரிஷியை வேண்டிக்கொண்டு சக்கரமும் வைகுண்டத்துக்குப் போய்விட்டது.

அந்தப்படி உண்டான சக்கர தீர்த்தம் ஆதியிலே தருமபுஷ்கரணியென்று பேர்விளங்கிக்கொண்டிருந்து அப்பால் சக்கர தீர்த்தமென்று பேராய் தேவிப்பட்டணத்தில் விளங்கிக்கொண்டு இருக்கிறது. இந்தச் சக்கர தீர்த்தத்தினுடைய மகிமைஇப்படியாக்கும்.இதற்குச் சமானமான தீர்த்தம் ஒரு இடத்திலுமில்லை. ஆயிரங்கோடி ஜென்மங்களில் பண்ணின பாவங்களெல்லாம் இந்தச் சேதுவிலே உண்டாயிருக்கிற சக்கர தீர்த்தத்தை நினைத்தாலும் விமோசனமாகும். கங்காநதி, மணிகர்ணிகை, கோதாவரி, யமுனை, சரஸ்வதி, துங்கபத்திரி, நர்மதை, சிந்து, காவேரி முதலாகிய புண்ணிய தீர்த்தங்களை ஆடிய பலனை இந்தச் சக்கர தீர்த்தங் கொடுத்துக்கொண்டிருக்கிறது என்று சூதமகாரிஷி சொல்ல நைமிசாரண்ணியத்து ரிஷிகள் கேட்டு ஆனந்த சந்தோஷ ஆச்சரியங்கொண்டு இப்படிக்கொத்த சக்கர தீர்த்தக்கரையில் தவசுபண்ணிக்கொண்டிருந்த காலவ மகாரிஷியை யெடுத்துக்கொண்டு போகவந்த இராட்சதன் யார்? அவன் இவரை யெடுக்கவந்து சக்கரத்தினால் மரணமாகவேண்டிய காரணம் என்னவென்று ரிஷிகள் கேட்க சூதமகாமுனிவர் சொல்லுகிறார்.

## க-வது சக்கர தீர்த்த மகத்துவம் முற்றிற்று.

## உத்தமன் மகத்துவம்.

விசுவாவசு வென்கிற கந்தருவனுடைய மகன் உத்தமனென்பவன் திருவாலவாய்த் தடாகத்தில் ஜலக்கிரீடை செய்து நிருவாணமாய் நின்றதற்காக வசிஷ்டரால் சாபம்பெற்றுப் பதினாறுவருடம் இராக்கதனாய்த் திரிகையில் மேல்விளங்கிய காலவ மகாரிஷியை மேல் விளங்கிய இராட்சதனாக நின்று தின்ன வெத்தனிக்கும் போது சொற்ப சக்கரத்தாலிறந்து சாபந்தவிர்ந்து பழையபதியை யெய்தியிருக்கிறான்.

## விதூமன் மகத்துவம்.

அஷ்டவசுக்களி லொருவனாகிய விதூமனும் தேவ நடனமாதராகிய அலம்புசையும் பிரமாவினாற் சாபம்பெற்று அவ்விதூமனென்பவன் பாண்டு வமிசத்து ஜெனமேஜெயன் மகன் சதாநீகனுக்குஞ் சகஸ்திராநிகனென்று மகனாய்ப்பிறந்திருந்தான். அவ்வலம்புசையென்பவள் அயோத்திக்கரசனான கிருதவன்மா வென்பவனுக்கு மிருகாவதி யென்கிற புத்திரியாய்ப் பிறந்திருந்தாள். அஞ்ஞான்று அவ்விருவரும் விவாகம் பண்ணிக்கொண்டு வாழுநாளில் திலோத்தமை சாபத்தால் கச-வருஷம் பிரிந்திருந்தார்கள். அப்போது கருப்பவதியாயிருந்த அம்மிருகாவதியீன்ற உதயனென்கிற பிள்ளையுடனும் அம்மிருகாவதியுடனும் சகஸ்திரா நீகனிருந்து நாடாண்டு புத்திரனுக்கும் பட்டங்கட்டி வைத்துவிட்டு இருவருந் துறவெய்திச் சக்கர தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து ஜென்ம சாபல்யமாகிப் பழையபதியை யெய்தினார்கள்.

## தேவிபட்டண மகத்துவம்.

திதியென்பவளின் மகள் மகிஷமுகமாக விருந்து சுபாரிசமுனியைநோக்கிப் புத்திரப்பேற்றுக்காகத் தவஞ்செய்தாள். அம்முனிவர்

அநுக்கிரகத்தால் அவள் காட்டின்கண் சாபகாரணப்படி வரமுனி யென்பவர் மகிடாசுரனாய்ப்பிறந்து தேவர்களைத் தொந்தரிக்க நேரிட்டது. அஃதொழிக்கவென்று பரமசிவனானவர் ரௌத்திராகாரமாய்க் கோபப்பட்டவுடனே சகல தேவர்களிடத்திலுமிருந்து கோபாக்கினிகடோன்றின. அவைகளை ஒருபெண் சொரூபமாய் வரும்படி பரமசிவன் நினைத்தார், உடனே அக்கினிவர்ணமாய் மகாகோரரூபமாய், பிரம்மாண்டவடிவாய்ச் சிவனுடைய கோபாவேசமே முகமாகவும், விஷ்ணுவினுடைய சினச்சுவாலையே கரங்களாகவும், சந்திரனொளியே இரண்டு தனங்களாகவும், வருணன் ஒளியே தொடை முழந்தாள்களாகவும் ஆதவனொளியே கால்நகங்களாகவும், அஷ்டவசுக்களி னொளியே கை நகங்களாகவும், பிரகஸ்பதியினொளியே நாசியாகவும், அனற்கடவுளொளியே கண்களாகவும், நவப்பிரமாவினொளியே வெண்ணகைத் தந்தங்களாகவும், ஏனைத்தேவர்களொளி ஏற்ற அவயவங்களாகவும், ஓர் தேவி தோன்றிநின்றனள். அவள் சர்வதேவர்களி னாயுதங்களையும், வரப்பிரசாதங்களையும், துர்க்காதேவியென்னும ஆக்குவயத்தையும், ஈஸ்வரனுடைய வுத்தரவையும் பெற்று மகிடாசுரனோடு யுத்தஞ்செய்கையில், அம்மகிடாசுரன் ஆற்றாதோடிச் சக்கரதீர்த்தத்தின் மறைந்தான். அவனைத்தேவி அசரீரிவாக்காற் றெரிந்து தனது வாகனமாகிய சிம்மத்தைக்கொண்டு அத்தீர்த்த முழுவதையுங் கிரகிக்கும்படிசெய்து, மகிடனைக் கண்டுபிடித்துக் காலால்மிதித்துக்கொண்டு, சூலத்தாற் றொண்டையிற் குத்தி, வாளாற் சிரசையரிந்து கொன்று மகிஷமர்த்தனியெனப் பெயர்பெற்றனள். உடனே அச்சக்கரதீர்த்தக் கரையிற்றானே அத்துர்க்கா தேவியைத் தேவர்களெல்லாம் வாழ்த்தித் துதித்து, அத்தீர்த்தத்தி னிடமாய் ஆகாய கங்கையைநிரப்பி, யாவரும் ஸ்நானஞ்செய்து, தேவிக்கு ஆலயமுண்டாக்கி உற்சவம் நடாத்தித் தேவிபட்டணமென்று வழங்க வாழ்த்தினார்கள். அதுமுதல் இரத்தநிற வர்ணத் துர்க்காதேவியானவள் ஆங்கு வீற்றிருக்கின்றனள்.

அந்தச் சக்கரதீர்த்தத்தில் முழுகினவர்கட்கு நினைத்தபொருள் சித்திக்க என்று அத்தேவி வரமு மளித்திருக்கிறாள்.

கடவுள் துணை.

# உ-வது வேதாளதீர்த்த மகத்துவம்.

காலவமகரிஷி புத்திரி காந்திமதி யென்பவளைப் புணரவெண்ணி பலாத்காரஞ்செய்த சுதரிசனனென்னுங் கந்தருவனை அவ்விருடிகள் இவற்றுத் தசை உதிரம் இவைகளை யருந்தி ரிஷிகளைப் பலாத்காரஞ் செய்வது அரக்கருடையவும் வேதாளத் துடையவுஞ் செய்கையாகும் ஆகலின் நீசெய்தபலாத்காரத்தினால் முதலில் மானுடவுருவடைந்து பின்னர் வேதாள மாகுதியென்றும், அவனுடைய சகோதரனாகிய சுகன்னனைநோக்கி நீ இவன்செய்த வன்செய்கையைத் தடுப்பதின்றிப் பார்த்திருந்ததால் மானிட வுருவாகுதியென்று சபித்துத் தன்புத்திரியை யழைத்துச் சென்றனர். இருடியிட்டசாபப்படி யமுனை யாற்றங்கரையிலுள்ள கோவிந்தசாமி யென்னும் வேதியனுக்குச் சுதரிசனன் விசயதத்தனென்கிற புத்திரனாகவுஞ் சுகன்னன் அசோகதத்த னென்கிற புத்திரனாகவும் பிறந்திருக்கும்போது அங்குப் பன்னிரண்டாண்டு மழையின்மையாற் பஞ்சமேற்பட்டது. அக்காலம், அக்கோவிந்தசாமியென்னும் வேதியன் மனைவி மக்களுடன் தன்னூரை விட்டுக் காசிப்பதியை யடைந்து, அப்பதிக்கு வடதிசையிற் றவஞ்செய்கிற கபாலமாலாமான னென்னு முனிவரை வணங்கிக்கொண்டு ஒரு பாழுங்கோவிலை யடைந்தனர், அன்றிரவு தன் விசயதத்தனுடனும் தம்பி அசோக தத்தனுடனும் நித்திரை போனார்கள். அப்போது கடுத்த விசயதத்தனுக்குச் சுரமுங் குளிருமுண்டாயிற்று. அதைத் தணிக்கவென்று விசயதத்தன் விரும்பியவாறு தந்தையாகிய வேதியன் நெருப்புக்காக அங்குமிங்கு மலைந்து அகாலமானதாற் கிட்டாமல் வந்துசேர்ந்து நெருப்பில்லை யென்றான். அதை அம்மைந்தன் கேட்டு இல்லையென்பதென்ன? அதோ வெளிச்சந் தெரிகிறதென்றான். பிதா, அவ்வெளிச்சம் மயானத்திற் பிணத்தைப் பற்றிக்கொண்டெரிகிறது, அங்கு செல்வது யாருக்கும் அச்சமா யிருப்பதன்றி, அந்தியைத் தீண்டினும் ஆயுள் குறையும் அதனாலுதவா தென்றான். மகன், குளிர்க்காற்றாது அங்கு செல்வே னென்றெழுந்து பிதாவுடன் சென்று எரி

பிரேதத்தை இருவருமடுத்தார்கள், அங்ஙனம் விசயதத்தனுக்குக் குளிர் சற்றுநீங்கியபின் அவன் கமலம்போல் மிகச்சிவந்தெரிகிற இது என்னவென்றான், பிதா அதுமண்டையில் பற்றிக் கொண்டு விளங்கெரியும் கனலென்றான். அப்போது புதல்வன் ஒரு காஷ்டத்தால் அம்மண்டையிற் புடைக்க அது தகர்ந்து மூளைசிதறி அவன்முகத்திற்பட்டது. அதையவன்நாவால் நக்கிச் சுவைத்துக் கொண்டுஅக் கபாலத்தையெடுத்து மூளை முழுவதையும் ஆவலோடு புசித்தவுடன் ஆகாயமளாவிய கோரரூபத்தோடு வேதாளமாகிப் பேரொலி முழக்கினான். அதுகண்ட பிதா கோவிந்தசாமி அஞ்சித் தனது பத்தினியுடன் மற்றொரு புத்திரனிருக்கிற இடத்தைக்குறுகி விசனித்திருந்தனன், வேதாளமாய்ச் சென்றவன் கபாலத்தைத் தகர்த்தகாரணத்தாற் கபாலபோடகனென்கிற நாமம் பெற்றுப் பூதவேதாளங்களுக்கரசனான நாஸ்திபூஷணனுடைய சேனைகட்குச் சேனாதிபதியாயிருந்து சித்திரசேனனென்கிற வீரனால் அந்த நாஸ்திபூஷணன் மாண்டபின், அச்சேனைகளுக்குத் தானே அரசனாயிருந்தான். சில நாட் சென்று அசோகதத்தனுக்கும்' அப்பெரிய வேதாளத்திற்கும் ஒரு தாமரைத் தடாகத்தின் மூலம் போர் விளைந்தது. அங்ஙனம் வேதாளவரசன் சைன்னிய முழுதும் மடிந்தவுடன் அசோகதத்தன் வேதாளத்தைக்கொல்ல வலி மீக்கொண்டெழும் போது விக்கினகவுத்துகன் வந்து கொல்லாதே. அவனுனது தமையனென்று வரலாறுகூறியவுடன் அசோகதத்தன் சாப நீங்கிப் பழைய சுதன்னனானான். அந்த விக்கினகவுத்துகன் கூறியவாறு கபால போடகன் சேது மார்க்கத்திலுள்ள ஒரு புண்ணிய தீர்த்தக் கரையை யடைந்தபோது வாயுவினியக்கத்தால் அத்தீர்த்தத்தினின்றும் ஒரு திவலையெழுந்து அவனுடம்பிற்பட விசயதத்தனாகிய பிராமணனுருவடைந்தான். அங்ஙனஞ்சங்கற்பஞ்செய்து கொண்டு அத்தடத்தின்கண் இவன் முழுகப் புராதனசுதரிசனனென்கிற கந்தருவனாகித் தனது சகோதரனுடன் கந்தருவலோகத்தையடைந்தான். அதுமுதலதற்கு வேதாள தீர்த்தமெனப் பெயர் விளங்கிற்று.

அந்தத் தீர்த்தத்திற்கு உத்தரபாகத்திலுள்ள ஓர் சத்திசந்நிதானத்தைத் தில்லை வளநாயகி ஆலயமென இப்பொழுது சொல்லப்படும். விளங்கிய வேதாள தீர்த்தம் மேற்சொன்ன கந்தமாதனகிரியில் அடசாரலிலிருக்கிறதெனப் புராணம் புகல்கின்றது. கந்தமாதனம்

கடவுள் துணை.

## உ-வது வேதாளதீர்த்த மகத்துவம்.

---

காலவமகாரிஷி புத்திரி காந்திமதி யென்பவளைப் புணரவென்று பலாத்காரஞ்செய்த சுதரிசனனென்னுங் கந்தருவனை அவ்விருடி கண்ணுற்றுத் தசை உதிரம் இவைகளை யருந்தி ஸ்திரீகளைப் பலாத் காரஞ்செய்வது அரக்கருடையவும் வேதாளத் துடையவுஞ் செய்கையாகும் ஆதலின் நீசெய்தபலாத்காரத்திற்கு முதலில் மானுடவுருவடைந்து பின்னர் வேதாள யாகுதியென்றும், அவனுடைய சகோதரனாகிய சுகன்னனைநோக்கி நீ இவன்செய்த வன்செய்கையைத் தடுப்பதின்றிப் பார்த்திருந்த தால் மானிடவுருவாகுதியென்றுஞ் சபித்துத் தன்புத்திரியை யழைத்துச் சென்றனர். இருடியிட்ட சாபப்படி யமுனை யாற்றங்கரையிலுள்ள கோவிந்தசாமி யென்னும் வேதியனுக்குச் சுதரிசனன் விசயதத்தனென்கிற புத்திரனாகவுஞ் சுகன்னன் அசோகதத்த னென்கிற புத்திரனாகவும்பிறந்திருக்கும்போது அங்குப் பன்னிரண்டாண்டு மழையின்மையாற் பஞ்சம்நேர்ந்தது. அக்காலம், அக்கோவிந்தசாமியென்னும் வேதியன் மனைவி மக்களுடன் தன்னூரை விட்டுக் காசிப்பதியை யடைந்து, அப்பதிக்கு வடகீழ்த் திசையிற் றவஞ்செய்கிற கபாலமாலாபரண னென்னு முனியையவணங்கிக்கொண்டு ஒரு பாழுங்கோவிலை யடைந்தனன், அன்றிரவு தந்தை விசயதத்தனுடனும் தம்பி அசோக தத்தனுடனும் நித்திரை போனார்கள். சிறிதுநேரங் கழித்து விசயதத்தனுக்குச் சுரமுங் குளிருமுண்டாயிற்று. அதைத் தணிக்கவென்று விசயதத்தன் விரும்பியவாறு தந்தையாகிய வேதியன் நெருப்புக்காக எங்குமலைந்தும் அகாலமானதாற் கிட்டாமல் வந்துசேர்ந்து நெருப்பில்லை யென்றான். அதை அம்மைந்தன் கேட்டு இல்லையென்பது பொய். அதோ வெளிச்சந் தெரிகிறதென்றான். பிதா, அவ்வெளிச்சம் மயானத்திற் பிணத்தைப் பற்றிக்கொண்டெரிகிற தீ, அங்கு செல்லத் தூரமும் அச்சமுமாயிருப்பதன்றி, அத்தீயைத் தீண்டினும் ஆயுள் குறையும். அதனாலுதவா தென்றான். மகன், குளிருக்காற்றாது அங்குச் செல்வே னென்றெழ, பிதாவுமுடன் சென்று எரிகிற

பிரேதத்தை இருவருமடுத்தார்கள், அங்ஙனம் விசயதத்தனுக்குக்
குளிர் சற்றுநீங்கியபின் அவன் கமலம்போல் மிகச்சிவந்தெரிகிற
இது என்னவென்றான், பிதா அதுமண்டையில் பற்றிக் கொண்டு
வளைந்தெரியும் கனலென்றான். அப்போது புதல்வன் ஒரு காஷ்டத்
தால் அம்மண்டையிற் புடைக்க அது தகர்ந்து மூளைசிதறி அவன்மு
கத்திற்பட்டது. அதையவன்நாவால் நக்கிச் சுவைத்துக் கொண்டுஅக்
கபாலத்தையெடுத்து மூளை முழுவதையும் ஆவலோடு புசித்தவுடன்
ஆகாயமளாவிய கோரரூபத்தோடு வேதாளமாகிப் பேரொலி முழக்
கினான். அதுகண்ட பிதா கோவிந்தசாமி அஞ்சித் தனது பத்தினி
யுடன் மற்றொரு புத்திரனிருக்கிற இடத்தைக்குறுகி விசனித்திருந்த
னன், வேதாளமாய்ச் சென்றவன் கபாலத்தைத் தகர்த்தகாரணத்தா
ற் கபாலபோடகனென்கிற நாமம் பெற்றுப் பூதவேதாளங்களுக்கரச
னான நராஸ்தி பூஷணனுடைய சேனைகட்குச் சேனாதிபதியாயிருந்து
சித்திரசேனனென்கிற வீரனால் அந்த நராஸ்தி பூஷணன் மாண்டபி
ன், அச்சேனைகளுக்குத் தானே அரசனாயிருந்தான். சில நாட் சென்
று அசோகதத்தனுக்கும் அப்பெரிய வேதாளத்திற்கும் ஒரு தாம
ரைத் தடாகத்தின் மூலம் போர் விளைந்தது. அங்ஙனம் வேதாளவர
சன் சைன்னிய முழுதும் மடிந்தவுடன் அசோகதத்தன் வேதாளத்
தைக்கொல்ல வலி மீக்கொண்டெழும் போது விக்கினகவுத்துக
ன் வந்து கொல்லாதே. அவனுனது தமையனென்று வரலாறுகூறிய
வுடன் அசோகதத்தன் சாப நீங்கிப் பழைய சுதன்னனானான். அந்த
விக்கினகவுத்துகன் கூறியவாறு கபால போடகன் சேது மார்க்கத்தி
லுள்ள ஒரு புண்ணிய தீர்த்தக் கரையை யடைந்தபோது வாயுவினி
யக்கத்தால் அத்தீர்த்தத்தினின்றும் ஒரு திவலையெழுந்து அவனுட
ம்பிற்பட விசயதத்தனாகிய பிராமணனுருவடைந்தான். அங்ஙனஞ்சங்
கற்பஞ்செய்து கொண்டு அத்தடத்தின்கண் இவன் முழுகப் புராதன
சுதரிசனனென்கிற கந்தருவனாகித் தனது சகோதரனுடன் கந்தரு
வலோகத்தையடைந்தான். அதுமுதலதற்கு வேதாள தீர்த்தமெனப்
பெயர் விளங்கிற்று.

அந்தத் தீர்த்தத்திற்கு உத்தரபாகத்திலுள்ள ஓர் சத்திசந்நி
தானத்தைத் தில்லை வளநாயகி ஆலயமென இப்பொழுது சொல்லப்
படும். விளங்கிய வேதாள தீர்த்தம் மேற்சொன்ன கந்தமாதனகிரியி
ன் வடசாரலிலிருக்கிறதெனப் புராணம் புகல்கின்றது. கந்தமாதனம்

சேது பந்தனத்தாற் சமதளப்பட்டு விட்டதுபற்றி அது உன்னதமாகத் தோன்றத்தக்கதில்லை. அந்தச் சேதுபந்தனத்தையுந் தென்சமுத்திர மலசிக் கொண்டு வந்து சமுத்திரமாயிருக்கின்றது. இராமலிங்கத்திற்கு வாயுமூலைப் பக்கமா யிப்போதிருக்கின்ற கந்தமாதன மென்று மணற்குன்று புராணத்திற் சொல்லப்படுகின்றது கந்தமாதனமன்று.

## ௩-வது பாவநாச தீர்த்தமகத்துவம்.

திடமதியென்கிற ஒரு சூத்திரனுக்குச் சுமதியென்கின்ற ஓர் பிரமச்சாரி பிராமணகிருத்திய வேள்வி முதலியவைகட்குரிய மந்திரோபதேசங்களைக் கற்பித்ததனால் அங்ஙனம் இருவருக்கு முண்டாகிய கொடும்பவங்கணிமித்தம் அனந்த ஜன்மம் பிறந்திறந்து நரகங்களையனுபவித்துக் கடைசியில் அப்பிராமணன் பிராமணப் பிறப்பிற் பிறந்து பேய்பிடித் தலைகையில் அகஸ்தியருந்தாரப்படி மேற்சொன்ன வேதாள தீர்த்தத்திற்குக் கிழக்கேயுள்ள பாவநாச மென்கிற ஓர் புண்ணிய தீர்த்தத்தில் முழுகிப்பாவந் தொலைந்தனன். மேற்படி திடமதியென்னும் சூத்திரன் இறுதியிற் கழுகாய்ப் பிறந்து பிணங்களைத்தின்று மேற்படி தீர்த்தத்தின் ஜலத்தைக்குடித்தும் அதினிட முழ்கியும் நின்றதினால் அது அவனுக்கு ஜன்மசாபல்யத்தைத் தந்து தேவபோகத்தையும் கொடுத்தது. அத்தீர்த்தம் சேதுமார்க்கத்தினுள்ளிருக்கிற ஊரை இப்பொழுது வெற்றிலை மண்டபமெனச் சொல்லப்படும்.

## ௪-வது சீதாகுண்டத் தீர்த்தமகத்துவம்.

விந்தாரணியத்திலிருந்த திரிவக்கிரனென்னும் இராட்சசன் மனைவி சுசிலைக்கும், சுசிமகாரிஷிக்கும் புத்திரனாய்ப் பிறந்து வைசயந்த மென்னும் பட்டணத்திலிருந்த கபாலபாணனென்கிற ராட்சசனை இந்திரன் வச்சிராயுதந்தால் வெட்டிக் கொன்று விட்டான். அவனுடைய பிரமஹத்தியை ஆகண்டலன் அயனுத்தரவுப்படி பாவநாசத்திற்குப் பூர்வதிக்கிலுள்ள சீதா தீர்த்தக்கரையிற் சிவனைநோக்கி வே

ளிசெய்து வணங்கியும் அத்தீர்த்தத்தில் மூழ்கியுந் தீர்த்துக்கொ
ண்டான். அத்தீர்த்தமானது இலங்கேசனெடுத்துச்சென்ற சீதாதே
வியின் கற்புநிலைமையை வெளிப்படுத்தும்பொருட்டு இராம ராக்கி
யாபித்தபடி சீதாபிராட்டியா ரக்கினிப்பிரவேசமானவிடமா மதைச்
சீதாகுண்டமெனப்படும். அப்படி அக்கினிப்பிரவேசமானபின் அப்
பிராட்டியால் ஸ்நானஞ் செய்வதற்கு நிருமித்த தீர்த்தம் அது
வாகும்.

---

## ௫-வது மங்கல தீர்த்த மகத்துவம்.

---

சந்திரகுலத்து விக்கிரமபாண்டியனுடைய புத்திரனான மனோ
ஜவராஜனும், அவன்பத்தினி சுமித்திரையும் மகன் சந்திரகாந்தனு
ம் நீதியா யரசாண்டுவருங்காலத்தில் அரசன் பிராரத்தப்படி கொடு
ங்கோன்மன்னனானான். அப்போது ஊணதேசத்துக் கோலபனென்
கிற இராஜா அவ்வரசனுடைய நாட்டை யபகரித்துக் கொண்டான்.
உடனே மனோசவன் குடும்பியாகிய பாரியுடனும் மைந்தனுடனுங்
காடெய்தி அங்குபட்டினிகிடந்ததினாலும் புத்திர வாஞ்சையினாலும்
மூர்ச்சித்துக்கிடந்தான். அதுகண்டு பெண்டிரும் பிள்ளையும் அதி
ககம்பலையுற்றார்கள், அஞ்ஞான்று பராசரரிஷி தண்டு கமண்டலதாரி
யாய்த் தோன்றினார். அவரிடம் அவர்கள் விண்ணப்பித்துக்கொண்
டதற் கிரங்கி அவ்விருடிசொன்னவண்ணம் அம்மனோசவன் சே
துமார்க்கத்திற் சீதாகுண்டத்திற் கருகிலுள்ள மங்கலதீர்த்தத்தில்
ஸ்நானஞ்செய்து மூன்றுமாதம்வரையில் சிராத்தநடாத்தி முனிவ
ருபதேசித்த மந்திரத்தை ஜெபித்தான். அதன்மேல்அவன் இரத கஜ
துரகமுதலிய வாகனாதிகளும், ஆயுதம் ஆபரணம் ஆடை முதலிய
வைகளும் அந்தத்தீர்த்தத்தில் ஒவ்வொன்றாய் மிதந்துவர அவைக
ளையொப்புக்கொண்டு அங்ஙனம் பராசரரிஷியால் ஆசீர்வதித் முடி
சூட்டப்பெற்றுத் தன்னாடுசென்று கோலபனையெதிர்த்து ஜெயித்
துத் தானரசனாயிருந்து செங்கோல்செலுத்தினான். அப்பாற் றன்குரி
சிலுக்குப் பட்டத்தை நல்கிவிட்டு மேற்படி தீர்த்தக்கரை யருகிரு
ந்து தவம்புரிந்து தேகநழுவியவுடன் பரமசிவன் பதியை யடைந்தா
ன். உடனே யவன்பத்தினி சுமித்திரையென்பவள் தன்னுடையமங்

கலத்துடன் சககமனஞ்செய்து பதியை யெய்தினாள். அது மங்கலதீர்த்தமெனப் பெயர் விளங்கப் பெற்றுச் சேதுமார்க்கத்தி லிருக்கின்றது.

---

## ௩௪-வது அமுததீர்த்த மகத்துவம்.

---

அகஸ்தியர் சகோதரரான நாரணமகாரிஷியென்பவர் இமாசலச்சார்பில் பரமனைநோக்கி அடியார்தொண்டும் சிவபூசையும் ஆயிரம் ஆண்டு நடாத்தியும் முத்திகிடையாததுபற்றி மீட்டும் ஆயிரம்ஆண்டு பஞ்சாக்கினிமத்தியிற் றவமிருந்தார். அப்போது பரமசிவன் தரிசனங்கொடுத்து, "நீ சேதுவிலுள்ள அமுத தீர்த்தத்தில் முழுகி முத்தியைப் பெற்றுக்கொள்" என்று உத்தரவளித்தபடி அவர் மங்கல தீர்த்தத்திற்குக் கிழக்கிலுள்ள ஏகாந்தராம ஸ்தலத்தின்கண் அமுத தீர்த்தத்தில் மூன்றுவருஷம்வரையில்முழுகிச் சமாதிகூடிப் பிரம்ம சொரூபத்தை யறிந்து மோட்சம்பெற்றார். அமுதம்-மோக்ஷம்.

---

## ஏகாந்தராமசுவாமிகோயில் மகத்துவம்.

---

ஏகாந்தராமமென்னும் ஸ்தலமானது ஸ்ரீராமரானவர் லட்சுமணர், விபீஷணர், அநுமான், சுக்ரீபன் முதலானவர்களுடன் இலங்கைக்குச்செல்லும் விஷயத்தைக்குறித்து ஏகாந்தமா யிருந்து இரகசியம்பேசிய இடமாகும். அப்படிப் பேசும்போது சமுத்திரகோஷ்டம் பேச்சைமறைத்ததால் அந்நேரம் காகுத்தன் கைக்கோதண்டங்கொண்டு வடகடலிலூன்ற அவ்வொலியடக்கமாக இருக்கின்றதன்றோ? வடகடலென்றது சேதுவென்னுந் திருவணைக்கு உத்தரபாகத்துள்ள கடலெனக்கொள்க. இந்த வடகடலில் எக்காலும் நன்னீர்க்குமிழிகள் ஓரிடத்தி லெழும்புகின்றன. அதை வில்லூன்றி யென்று ஜனங்கள் சொல்லுகிறார்கள்.

## ௭-வது பிரமகுண்டதீர்த்த மகத்துவம்.

பிரமாவும் விஷ்ணுவும் சண்டையிட்ட ஸ்தலத்தில் ஜோதிலிங்கமாய்த் தோன்றிய அக்கினிமயிலத்தி னுச்சியையறிந்ததாய்ச் சொன்ன பிரமதேவனுடைய பொய்யைக்குறித்து உலகின்கண் ணுனக்குப் பூஜையும் ஆலயமு மில்லாமற்போகக் கடவதென்று சிவபெருமான் சபித்த சாபத்தை யொழிக்கவென்று வந்தித்துக் கெஞ்சிக்கேட்டுக்கொண்ட பிரமாவுக்குப் பரமன் பகர்ந்தபடி அவர்கந்தமாதனகிரியில் சேதுவில் பௌண்டரகமுதற் பல யாகங்களியற்றிமுடித்துத் தேவர்களுக்குப்பூரணாகுதிகொடுத்துப் பொய்புகன்ற தோஷத்தைத் தொலைத்து பரமசிவனலங்கிய வரப்பிரசாதமும் பெற்றார். அப்படிப்பட்ட வேள்விக்குண்டத்துழிப் பூரணாகுதி செய்ததா னிரம்பிய ஜலத்தினிடை ஸ்நானஞ் செய்தும் அதிலுண்டாகும் வெண்மிருத்திகையைத் தரித்தும் வருபவர்கட் கநேக புண்ணியங்க ளுண்டென்றும் இது பிரமகுண்டமெனப் பெயர் விளங்குமென்றும் ஈஸ்வரர் திருவாக்கருளினாராக்கும். அதைத்தான் பிரமகுண்டமெனப் பேசுவது. இஃது கூறிய அமுததீர்த்தத்திற்குக் கிழக்கே இராமேசர்பதியிலிருக்கின்றது.

## ௮-வது அனுமகுண்டதீர்த்தமகத்துவம்.

இராவணனைக் கொன்றதாற் சம்பவித்த பிரமஹத்தியை ராமரானவர் தண்டகாரண்ணிய முனிவர்கள் உத்தரப்படி சிவபூசைபண்ணித் தீர்ப்பதற்காகக் கந்தமாதனத்திலிருந்து கொண்டு ஆஞ்சனேயரைச் சிவலிங்க மெடுத்து வரும்படியாய் அனுப்பி வைத்ததில் அவர் வருவதற்குத் தாமதப்பட்டது கண்டு ஆனிமாதம் சுக்கிலபட்சம் புதவாரம் சதையநட்சத்திரம் தசமிதிதி விதிபாதயோகம் ரிதைபலக்கினம் இவைகள் கூடிய உஷத்காலமாகிய சூரியோதயத்தில்

சீதாதேவி திருக்கரத்தால் மணல்கூட்டிப் பிடித்த பார்த்திபலிங்கத்தையே அவ்விராகவன் சில சின்னங்களையணிந்துகொண்டு நந்திரக்கிரமப்பிரகாரம் பூசைசெய்து பிரசன்ன சக்கர தரிசனங் கண்டு வேண்டியவரங்களும் பெற்றுக்கொண்டனர். உடனே பகவானாகிய பரமசிவனும் காகுத்தனைநோக்கி உன்னால் ஸ்தாபிக்கப்பட்ட இலிங்கத்தைத் தரிசித்தவர்கள் பாவம்நீங்கிப் பரகதிபெறுவர். இது சத்தியம் என் றருளிச்செய்து இலிங்கத்தினிடம் மறைந்துபோனார். தேவர்களும் முனிவர்களும் தனித்தனி இலிங்கங்களை அங்கு ஸ்தாபித்தனர். அப்பால் மங்கைநதிக்கரைக்குச்சென்று வெள்ளிமலையானருளால் இரண்டு காசிலிங்கங்கொணர்ந்த மாருதியானவர் மனவிசனங்கொண்டிருப்பதாக இராகவன் தெரிந்து ஆஞ்சனேயர் நோக்கப்படி இராமலிங்கத்தைப் பிடுங்கிவிட்டு நீ கொண்டுவந்த லிங்கத்தை ஸ்தாபிக்கக் கூடுமாயின் அங்ஙனஞ்செய் என்றார். அதுகேட்டமாருதி, மிகவும் நல்லகாரியமென்று விஸ்வரூபங் கொண்டெழுந்துதனது வாலை இராமலிங்கத்தின்கண் மூன்றுசுற்றுச்சுற்றி யுன்னிக்கிளப்பியபோது வாலறுப்புண்டு வடபாற் கூப்பிடுதொலையிற் குப்புறப்பாய்ந்து அவயவங்கள் சேதப்பட் டிரத்தப் பெருக்கெடுத்தோடமூர்ச்சித்துக் கிடக்குங்கால் மாருதியைச் சீதாதேவியாரும் இராமபத்திரரும்வந்தெடுத்துத் தேற்றித் தெளிவித்தார்கள், அநுமான் விழுந்த பள்ளத்தை அநுமகுண்டமென்னுந் தீர்த்தமா யேற்படுத்தி இதன் ஸ்நானத்தாற் குழந்தைகள் பிணியகலும், புத்திரசம்பத்துண்டாகும். சாகூந்தி, கங்கை, யமுனை முதலிய நதிகளிலாடிய பலனும் உண்டாகும் என வரமருளினார். அதுவே பிரமகுண்டத்திற் கருகிலுள்ள அநுமகுண்டம்.

ஸ்ரீராமர் சொல்லச் சம்மதித்து இராமலிங்கத்திற்கு உத்தரபாகத்தில் ஆஞ்சனேயர் தான்கொண்டு வந்த இலிங்கங்களி லொன்றை ஸ்தாபித்து அதற்கென்றும் முதற்பூசை நடக்கும்படி செய்துகொண்டனர். ஒன்றை அவர் ஆத்மார்த்தமாய்ப் பூஜித்தார். இராமலிங்கத்தில் அநுமான் வால் மூன்று சுற்றாய் விழுந்தவாறு மூன்று வரைகளுமிருக்கின்றனவாம்.

கேகயதேசத்தரசனாகிய தருமசகாவென்னென்பவன் தனது பத்தினிமார்கள் நூறுபெயர்களுடனும் அநுமகுண்டத்தில் ஸ்நானம்

பண்ணிப் புத்திரகாமேஷ்டியாகஞ்செய்து யாகத்தில் பிண்டசேஷத்
தை நூறுபத்தினிகளுக்குங்கொடுத்து நூறுபிள்ளைகளைப் பெற்று
மூத்தகுமாரனை சந்திரனுடன் இராச்சியமாண்டு பின்னும் அனு
மகுண்டக்கரையிலேயே தவமிருந்து நற்கதிசேர்ந்தான். அவன்ம
னைவிகளு மவ்வழிதானே அக்கினிப்பிரவேசமாகி அவனடைந்தபதி
யைச் சேர்ந்தார்கள்.

## ௯-வது அகஸ்தியதீர்த்தமகத்துவம்.

விந்தகிரியை அடக்குவதற்காகப் பரமசிவன் அகஸ்தியரையனுப்
பும்போது அவர் சிவபெருமானின் திருமண தரிசனம் பாராது
யான் போவதுண்டோவென்றார். அதற்குக் கர்த்தன் உனக்கு வே
தாரண்யமென்னுந் தலத்தில் அந்தத்தரிசனங் கொடுக்கிறோமென்ற
தற்கிசைந்து சென்ற அவ்வகஸ்தியர் விந்தகிரியைத் தரைமட்டமா
யடக்கித் தென்றிசைநோக்கிவந்து கந்தமாதனத்தின்கண் ணெழுந்
தருளியிருந்தார், அப்போ தவ்விடத்திற்றானே அவர் ஓர் தீர்த்தமு
ண்டுசெய்து அதில் ஸ்நானம்பண்ணிச் சிறிதுநாட் டவமியற்றிஇறு
தியிலதற் கநேக மகிமைகளுண்டாக வரப்பிரசாதம்வழங்கிப் பொ
திகைக்குப்போயினர். அதுதான் அனுமகுண்டத்திற்குக் கிழக்கே
அக்கினிமூலைப்பாரிசமாய் அகஸ்தியதீர்த்தமெனப் பெயர் விளங்கிக்
கொண்டிருக்கிறது.

வேதாரண்யத்திலுள்ள தீர்க்கதருமனென்கிற பிராமணனுக்
குக் கக்கீவானென்கிற புத்திரனொருவனுளன். அவன் சில சாஸ்திரங்
கள் கற்றுக்கொள்ளவேண்டுமென உதங்கமுனிவரிடம் அறுபதா
ண்டுவரையிலிருந்து கற்றுக்கொண்டு குருவை வணங்கிச் சுவாமீ!
தங்கள் கிருபையால் யாவுங் கற்றுணர்ந்தேன், இனி ஒருகன்னிகை
யைக்கூடி இல்லறநடாத்த வனுக்கிரகஞ் செய்யவேண்டுமென்றான்.
இதற்கவ் வுதங்கர் சொன்னவாறே அந்தப்பிராமணன் அகஸ்திய
தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து அவ்விடத்திற்றானே மூன்றுவருடம்
வரையில் நிஷ்டைசாதித்திருந்தனன். ஓர்நாள் அவனெதிராக அத்
தீர்த்தத்துக்குள்ளிருந்து நான்குகோட் டைராவதம் வெளியேவர
அதன்மேல் அவனேறிக்கொண்டு நடந்தான். அதை மதுராபுரிக்

காசனாகிய சவநயனென்பவன்கண்டு அவ்வேதியனையழைத்துக்கொண்டு அகஸ்திய தீர்த்தக்கரைவந்து சேர்ந்து தனது புத்திரியாகிய புண்ணியவதியென்பவளைத் தருவித்து அவனுக்குப் பாணிக்கிரகணஞ்செய்து கொடுத்தான். அப்பால் கக்ஷீவான்முதலிய யாவரும் அந்தத் தீர்த்தத்தில்மூழ்கி அக்கரையைவிட்டு நீங்கித் தங்கள் தங்களூர் போய்ச்சேர்ந்தார்கள். வெள்ளையானையும் அத்தீர்த்தத்தில் மூழ்கி மறைந்துவிட்டது.

---

## ௰-வது இராமதீர்த்தமகத்துவம்.

---

ஸ்ரீராமர் இராமலிங்கப் பிரதிஷ்டைசெய்து ஆலயநிருமித்து ஆங்காங்குரிய தேவதைகளைத் தாபனஞ்செய்து வேதியர்களை யழைத்துப் பட்டணமுண்டுபண்ணி அவர்கட்காப்பையுமுடைக்கிராமங்களுந் திரவியமுங்கொடுத்து இராமலிங்க அர்ச்சனைக்காகப் பொருள்களும் பூமிகளும் ஆபரணாதிகளும் கறவை கோக்களும், யானைகளும் நல்கி அயோத்தியாபுரிக்கெழுந்தருளும்போது தன்பேரால் ஒரு தீர்த்தமுண்டாக்கி அதில் வானராதி சைனியங்களுடன் தாமும் ஸ்நானம் பண்ணி அந்தத் தீர்த்தத்திற்கு வேண்டிய மகிமையும் வரப்பிரசாதமுமுண்டாகவேணுமென்று கடாக்ஷித்தார், அதற் கெப்போது இராமீசர்பதியில் இராமதீர்த்தமெனப் பெயர் விளங்காநிற்கும்.

சுதீக்ஷ்ணனென்கிற பிராமணன் அந்த இராமதீர்த்தக் கரையிலே விஷ்ணுவைநோக்கித் தவமிருந்தும் அதில் ஸ்நானம்பண்ணியும், இராமமந்திரத்தையே ஜெபித்தும் குருச்சேதமின்றி ஸ்ரீராமரையே குருவாகத் தியானித்துக் கடைசியில் சர்வசித்தியும் பொருந்தி ஸ்தூலவடிவத்துடன் தேவலோகமுதலிய பதிகளுக்கெல்லாஞ்சென்று தேவர்களுடன் கூடி வாழ்ந்து வேண்டிய சிறப்புப்பெறலானான். இன்னமும் பாண்டவ சிரேஷ்டனான தருமராசன் பாரதச்சமரி லசுவத்தாமாவென்னும் யானையிறக்கத் துரோணபுத்திரனான அசுவத்தாமா இறந்தானென்பதுபோலத் திட்டாந்தரஞ் சொன்னது கேட்டுப் புத்திரசோபத்தால் தழுவணையிற் சாய்ந்துகிடக்கிற துரோணாச்சாரியைத் திருஷ்டதுய்மன் பாணப்பிரயோகஞ்செய்து தலையை

அறுத்தகாரணத்தால் உதிஷ்டிரனுக்குற்ற தோஷத்தைப்பரிகரித்துப் பட்டாபிஷேகஞ் செய்யவேண்டுமென்று ஆகாயவாணிசாற்றியபடி வேதவியாசர் சம்மதப்பிரகாரம் தௌமியாசாரியுடன் தருமராசன் முதலியோர் இராம தீர்த்தக் கரையையடைந்து அதில் ஒரு திங்கள் வரை ஸ்நானம்பண்ணிப் பலதானங்கள் வழங்கி இராமலிங்கதரிசன முஞ்செய்தார்கள். அப்போது துரோணரிறந்ததால் நேரிட்ட தோஷம் தொலைந்ததாக ஆகாயவாணி சொல்லக்கேட்டு அஸ்தினபுரி சேர்ந்து உதிஷ்டிரர் பட்டாபிஷேகம்பெற்று உய்ந்திருந்தார். அக்காலம் அஸ்தினபுரியைக் காத்திருந்தவன் சகாதேவன்.

---

## ௧௧-வது. இலட்சுமண தீர்த்தமகத்துவம்.

---

இலட்சுமணரானவர் இந்திரசித்துவை வதைத்த தோஷ நீங்க வென்று தம்பேரால் சிவலிங்கப் பிரதிஷ்டையொன்று கந்தமாதனத் தின்கண் செய்தார். அது இராமலிங்கப் பிரதிஷ்டைக்கும், இராம தீர்த்தத்திற்கும் பச்சிமபாகத் திருக்கின்றது. அதனருகில் தம்பே ரால் இலட்சுமண தீர்த்தமென வொன்றுண்டாக்கி அதில் ஸ்நானஞ் செய்து சிவதரிசனம்பண்ணித் தன் நோக்கத்தை நிறைவேற்றிக் கொண்டார். நைமிசாரண்ணியத்திற்குவந்த பலபத்திராமர் அவணு றுமுனிவர்கட்குப் புராணசாரங்களைப் புகன்று கொண்டிருந்த சூத மாமுனிவர் தனக்குக் கீழ்ப்படியவில்லையென் றகங்காரங்கொண்டு சூதரைக் கொன்றுவிட்டார். அந்நேரம் முனிவர் வேண்டுகோட்படி அப்பலபத்திரர் சூதரைத் தபோபலத்தா லுயிர்த்தெழும்படி செய்து ஆங்கியற்று முனிவர் யாகாதிகிருத்தியங்களுக் கிடையூறுண்டுசெய் யும் வற்கலாசூரனைத் தம்மிடமுள்ள கலப்பையாயுதத்தால் மாட்டி வதைத்தார். தீர்த்த யாத்திரைகள் செய்தும் அதிலும்தாம்வதைத்த அசுரவேதியனுடைய பிரமகத்தி சரிவர நீங்காமல் எதிரில் வந்து வந்து தோன்றி நிற்பதுகண்டுகவலையுற்று மகாரிஷிகள்சொன்னவாறு இலட்சுமண தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து வேண்டிய தானதரு மங்கள்வழங்கி இலட்சுமணேசுரரை வழிபட்டு வாழ்த்தினதற்குப் பின் பிரமகத்தி விலகி விட்டதென்று ஆகாயவாக்குப் பிறந்தது அப்

பால் பலபத்திரர் தனுக்கோடி தீர்த்தங்களாடி இராமீசர் தரிசனமுங் கண்டு துவாரகைக்குப்போயினர்.

---

## ௧௨-வது ஜடாமகுட தீர்த்த மகத்துவம்.

---

ஸ்ரீராமர் லட்சுமணர் இருவரும் தங்கள் ஜடாமகுடத்தின்கண் ராவணாதி ராட்சசர்களுடைய ரத்தம் படிந்திருக்கு மென்பதை யுத் தேசித்து ஜடைகளைக் கழுவுவதற்காக ஓர் தடாக முண்டுபண்ணி அதில் சுத்திசெய்து கொண்டார்கள். அதையே ஜடாமகுட தீர்த்த மென்று சொல்லப்படும், வியாசர் குமாரரான சுக ரென்பவர் அகண்ட பரிபூரண சச்சிதானந்த சொரூப ஞான தெரிசன முண் டாவதற்கு அந்தக் கரணஞ் சுத்தப்படாதிருந்ததைக் குறித்துத் தந் தையாகிய வியாசரிடம் தெரிவித்துக்கொண்டார். அதற்கவர் நிகழ்த் தியபடி சுகமுனிவர் ஜடா தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்து அந்தக்கர ணசுத்தவிஸ்ராந்தியை எய்தினார். இன்னமும் வருணராஜபுத்திரனான பிருகுமாமுனி யென்பவரும் தூர்வாச மகரிஷியும் தத்தாத்திரே யரும் அதில் ஸ்நானம்பண்ணியும் அவ்வழித் தவமிழைத்து மகோந்நத மகிமை யெய்தினார்கள். அந்தத் தீர்த்தம் ஸ்ரீராமலிங்க மூர்த்திக்கு வலப்பாரிசமாய் ஒன்றரைக் கடிகை வழி தூரத்திலுள்ளது.

---

## ௧௩-வது ஸ்ரீலட்சுமி தீர்த்த மகத்துவம்.

---

ஓர் காலத்தில் மகாவிஷ்ணுவை மகாலட்சுமியானவள் விட்டுப் பிரிந்து கந்தமாதனகிரிச் சார்பிலே விளங்கிய மகரிஷிகள் மூலமாய் ஓர் பன்னசாலை யியற்றிக்கொண்டு நாரதர்வாக்கியப்படி சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து தன்பேரால் ஒரு தடாக முண்டுபண்ணித் தவமி ழைத்திருந்தாள். அப்போது அரியானவர் இலக்குமி தேவியைக் காணாமற் றேடிக் கந்தமாதனத்திற்கண்டு நல்ல சமாதானங்கள் செ ய்து அவளைத் தமது பதிக்கழைத்துக்கொண்டு போகும்போது அம் மகாலட்சுமியானவள் அந்தத் தீர்த்தத்திற்கு மாண்புள்ள வரங்களளித் துப் போயினள். அதனால் மகத்துவமாய் விளங்கிய அந்தத் தடாக த்திற்கு இலட்சுமி தீர்த்த மென்னும் பெயருண்டாயிற்று.

இதில் தருமராசனனவர் தம்பிமார்களுடன் கிருஷ்ணபகவா
னுத்தரவுப்படி ஒருமாதமளவும் தங்கியிருந்து ஸ்நானம்பண்ணி உ
பவாசமுதலிய விரதங்களிருந்து திருமகளைக்குறித்துப் பக்தியாய்த்
தவமியற்றி மற்றுமுள்ள சேது தனுக்கோடியாதி தீர்த்தங்களாடி
இராமபிரானுலாகிய இராமநாதசுவாமியைத் தரிசித்து இந்திரப்பிரஸ்
தம்போய்ச்சேர்ந்து தங்களுடைய தந்தையாகிய பாண்டுமகா ராஜா
வைத் தேவேந்திரசபைக் குரிமைப்பட்டிருக்க ராஜசூய யாகஞ்செ
ய்ய பாண்டு சொன்னதென நாரதர் நவின்றவாறு தம்பிமாரைக்கொ
ண்டு திக்குவிஜயஞ் செய்வித்துத் தாம் மூழ்கிய தீர்த்தமகத்துவ
தபோபலத்தால் வேண்டிய திரவியங்களைச் சுவாதீனமாகக்கொண்டு
௩௯0 நாளும் யாகத்தை நிறைவேற்றிப் பூரணாகுதி கொடுத்துச்
சம்ராட்டெனப்பெயர்பெறலானார், இலட்சுமிதீர்த்தத்தில்மூழ்கிய பல
னால் தேவர்கள் கற்பகநிழலையும் குபேரன் நவநிதியையும் நளகூப
ரன் அரம்பையின் இன்பநலத்தையு மடைந்ததுண்டென்று தரும
ராசனுக்குக் கிருஷ்ணமூர்த்தி சொல்லினர். இத்தீர்த்தம் இராமீசரு
க்கெதிரிலுள்ளது.

---

## ௧௬-வது அக்கினி தீர்த்த மகத்துவம்.

---

சீதாபிராட்டியாரின் கற்பைப் பரீட்சித்தவனுஞ் செவந்தமேனி
வக்கிரதந்தம் ஏழுநாவு இவைகளை யுடைத்தானவனுமான அக்கினி
தேவன் சமுத்திரஸ்நானம்பண்ணிவந்து ஸ்ரீராமரைத் தரிசித்தகால
த்தில் அவர் அக்கினிபகவானே! நீர்மூழ்கிய சமுத்திர ஸ்நானத்தி
ற்கு அக்கினிதீர்த்தமெனப் பெயர்விளங்கும். அதில் ஸ்நானம்பண்
ணுகிறவர்களுடைய பாவங்கள்தீரும், ஸ்திரீகள் கற்புடையவர்களா
வார்கள், பரிசுத்தமாகிய குழந்தைகளைப் பெறுவார்கள், பூதப்பிரேத
பைசாசங்களும் நீங்கும் என்பதாய் வரங்களை அத்தீர்த்தத்திற்குக்
கொடுத்திருக்கிறார், பாடலிபுத்திரமென்னும் பட்டணத்திற் பசுமா
னென்றொரு வைசியனுக்குள்ள எட்டுப்பிள்ளைகளில் துட்புண்ணியன்
என்கிறவன் பாடலிபுத்திரத்திலுள்ள சிறுவர்களையெல்லாம் விளை
யாடவென்று அழைத்துக்கொண்டுபோய் ஊருக்கிரண்டுமூன்றுகாடி

கைவழி தூரத்திலுள்ள கிணறு, ஆறு, தடாகங்களில் அமிழ்த்தி
அமிழ்த்திக் கொன்று கொண்டே வந்தான், அவன் ஒருநாள் ஒருத
டாகத்தில் தாமரைப்பூக் கொய்யவென்று ஐந்துகுழந்தைகளையழைத்
துப் போய் அதேவிதஞ் செய்து ஊருக்கு வந்த பின்னர் அமிழ்த்திய
பிள்ளைகள் ஆயுள்விருத்தியா லெழுந்துவந்து வினவினவர்கட்கு நட
ந்த சங்கதியை நவின்றார்கள், அதுபற்றி அவ்வூரரசனுண்மையுண
ர்ந்து, தனது விகதனுன பசுமான் செட்டியையும் அவன்மகன் துட்
புண்ணியனையு மழைத்துப் பசுமான் சம்மதப்படி பிள்ளைக் கொலைக்
காரனாகிய துட்புண்ணியனைப் பட்டினத்துக்குப் புறம்பாய் வெகு தூ
ரத்திலுள்ள காட்டிற் றுரத்துக, இனி நாட்டி லிவன் வரக்கூடாது
என்று கட்டளையிடப்பட்ட அவ்விதந் துரத்தப்பட்டான், அப்படித்
துரத்தப்பட்டேகிய துட்புண்ணியன் அவண் ஓர் இருடி குமாரனைக்
குளத்துச்சேற்றி லமிழ்த்திக் கொலைசெய்ததையறிந்த யவ்விருடி நீ
மதுபிள்ளையைக் கொன்றமையால் பேயாய் அலையக்கடவையென்று
சபித்தார், அப்பாலவன் அவ்வடவியின்கணுண்டாகிய ஊழி மாரு
தத்தாலும் மழையாலும் மிகவருந்தி ஆகாரங்கிட்டாமற் செத்தகளி
ற்றின் வாய்வழி நுழைந்து வயிற்றைப் பீறிக்கொண்டு வெளிவந்து
மீட்டும் நரியைப்போ லதிலிருந்தான்.

பிணுகம் பெருவெள்ளத்தா லுருட்டப்பட் டெடுபட் டுயிர்பிரி
ந்து அலகையாகி அநேக கற்பகாலம் ஆகாரமில்லா துழன்று அழு
துதிரிந்தான். அப்போது பொதிகைக் குருமுனியானவர் தண்டகார
ணியத்திலிருந்தார். அவரை யவன் கண்டு வணங்கித் தன் வரலாறு
கூறினன், அதுகண்ட அகஸ்தியர் இவன் துன்பத்தைத்தீர்க்கு முபா
யஞ் செய்வோமென் றெண்ணித் தமது சீடர்களிற் சுதீக்ஷணனென்
பவரை விளித்து நீஇவனுக்காகச் சேதுமத்தியிலுள்ள அக்கினி தீர்த்
தத்தில் ஸ்நானம் பண்ணி இவண்வருதி என்றனுப்பியபடி சுதீக்ஷ
ணனென்பவர் சென்று தினமூன்று சங்கற்பஞ்செய்து ஸ்நானம்பண்
ணி இராமநாத சுவாமியைத் தினமுந் தரிசித்து அவ்வக்கினி தீர்த்த
ங்கொண்டு வந்து பைசாசமாக இருக்கின்ற துட்புண்ணியன் மேற்
புரோட்சித்தனர், உடனே அவன் பைசாசரூப மொழிந்து தேவ
தாரூபம் பெற்று அகஸ்தியரை வணங்கிக் கொண்டு பின்னர் தெ
ய்வலோகத்தில் இரதத்தின் மீது போகப்பட்டான். அந்த அக்கினி

தீர்த்தம் இப்போது இராமீசர் சந்நிதானத்திற் கெதிரின் சமுத்திரக் கரையா யிருந்து கொண்டிருக்கிறது.

---

## ௬௫-வது சக்கர தீர்த்தமாகிய முனி தீர்த்த மகத்துவம்.

---

முன்னை நாளில் அகிற்புத்தகீயரென்றொரு முனிவ ரிருந்தார். அவர் விஷ்ணுவைக் குறித்துத் தவம் புரிந்து சுதரிசனமாகிய சக்கரத்தைத் தானியற்றுந் தவத்திற் கிடையூறில்லாதிருக்கக் காத்திருக்க வேண்டுமென்று வரம் பெற்றுக் கொண்டு கந்தமாதனத்தில் தவமியற்றும் வேளையில் அசுரர்களை மடித்து அம்முனிவருண்டுபண்ணியிருக்கிற தீர்த்தத்திற் குளித்துக் கொண்டு அச்சக்கரமிருந்ததா லதற்குச் சக்கர தீர்த்தமென்றும் முனி தீர்த்தமென்றும் பெயருண்டாயிற்று. இராட்சசர்களை நாசஞ் செய்வதற்காக ஒருசாலை நிருமித்து ருத்துவிக்குகள் ஹோதா-அனுஹோதா-உத்திர குமாரயசந்தன்-விஸ்வாமித்திரன்-அக்கினி-வருணன்-வாயு - பாராசரர்-அகஸ்தியர்-சுநச்சேபன்-மதுசந்தன் என்னும் பதினாறு பெயர்களை நியமித்து யாகத்துக்குச்சாக்ஷி தேவதையாக ஈசுவரனை வைத்து இந்திரன் யாககர்த்தாவாயிருந்து மகேசுர மென்ற யாகத்தை நடாத்திப் பூரணாகுதி கொடுக்கும்போது அவிர்ப்பாக சேஷத்தைருத்துவிக்குகள் முதலாகிய பேர்களுக்கு அத்வரியுவாயிருந்த அங்கிராவக்கிரர் பாகித்தளித்தா ரதில் மிகப் பிரசாதத்தோடும் விளங்கிய பிராசித்ர வெனப்பட்ட பாகத்தைச் சவிதாவென்ற சூரியன் கரத்திலளித்தார். அவரதை வாங்கினவுடனே அது அவருடைய கையிரண்டையும் அற்று விழும்படி செய்தது. அவ்வவதாஞ் சவிதா கோபித்து எனதுகரங் கூடினாலாயிற்று. இவ்வேதல் யாகத்தை நிறைவேற்றவொட்டேனென் றுத்திரப்படுகையில் அஷ்டாவங்கிரர் சொன்னவண்ணம் சக்கரதீர்த்தத்தில் சவிதாவாகிய சூரியனைத் தேவர்கள் ஸ்நானம் பண்ணுவித்தார்களப் போதற்றுப்போன கரங்களிரண்டு முண்டாயின.

அல்லாமல், முன்னாளிற் சாமளா புரமென்கிற பட்டிணத்திலு ள்ள அரியாமெனன்னும் வேதியன் தண்டகாரண்ய ரிஷிகளைத் தரிசி க்கவந்தகாலையில் வேடர்கள் இலக்கு நாட்டியெய்த அம்பு அந்தப் பிராமணன் காலைக் கண்டித்து விட்டது, அப்போ தந்த முனிரிஷிகள் உத்தரவுப்படி சக்கர தீர்த்தத்தில் மூழ்கி இராமநாதனைத் தரிசித்து கா ன் முன்னையகால் உண்டாகித் தன்னூர் போய்ச் சேர்ந்து முடிவில் நற்கதியு மடைந்தான், இந்தத் தீர்த்தம் கெடுதியான எந்த அவயவத் தையுங்கூட்டி வைக்கும் புண்ணிய முடையதுமன்றிச் சித்திக்கு காரி யத்தையுஞ் சேர்த்து வைக்குமென்றார்.

---

## ௧௬-வது சிவதீர்த்த மகத்துவம்.

---

கந்தமாதனச்சாரலிற் சிவபூசை செய்து கொண்டிருந்த அகஸ் தியருக்கும், கௌதமருக்கும் இஷ்டசித்தியை யுதவும்படியாய்ச் சிவபெருமானவர் தனது சூலத்தாலொரு தீர்த்தத்தை யுண்டாக் கிக் கொடுத்தார், அது சிவ தீர்த்தமென்று மகரிஷிகளாற் பெயரிட் டழைப்பதாயிற்று.

ஓர் காலத்திற் பிரமதேவனும், கருடவாகன மூர்த்தியும் நீசிறிய வன் நான் பெரியவனென் றிறுமாப்புக் கொண் டகந்தை மேலிடுவ தைக் குறித்து நான்கு மறைகளுக்கும் உங்களிருவருக்கு மேலானவ னொருவனுளன், நீங்கள் அகம்பிரமதத்துவங் கொள்ளாதீர்களென் று சொல்லியுங் கேளாத இருவருக்கு முன்னதாக வேதத்தினுடைய உச்சியில் ஸ்வயம் பிரகாசமாய்ச் சூடிலையென்னும் பிரணவந் தோன் றி பிரம விஷ்ணுக்களே! நீங்களறியாமையாய் அகம்பிரமதத்துவங் கொண்டீர்கள், பரமசிவனை மறந்து வாதுபுரிகின்றீர்கள் இது தகு தியானதன்று என்றுரைத்தும் அவர்களங்கீகரியாமையால் பர மசிவனவர் ஜோதிமயமா யெங்கும் பிரகாசித்து நின்றார். அப்போ தயன் மனமருண்டு அந்த ஜோதிக்குள் அரனுடைய சொரூபங்காணா ப்படுதல் கண்டும் முன்னரானைய அகந்தை பேசுகையில் ஆண்டவனுதி ய தில்லைத்தாண்டவ னாரிடமிருந்து "காலபைரவர்" என்று சத்தம்பி றந்தது. அந்நிமிடம் சூலதாராய் வீரப்பல் வச்சிரதந்த மிலங்க மகா

வுக்ரசௌரிய சொரூபத்துடன் சிவந்த குஞ்சிச் சடைகள் பிரகாசிக்கக் காலபைரவர்தோன்றி பிரமதேவனோடெதிர்த்து விஸ்வரூபங்கொண்டு எங்கும் பைரவராய்நின்று விஷ்ணுவுந் திடுக்கிட அயன் நடுமுகமாகிய ஊர்த்துவவதனத்தை நகத்தாற்கிள்ளி உயிரையுங்கவர்ந்தார். அப்பால் பரமனருள்வாரிசுரந்து பிரமனை உயிருடனெழுப்பி, எல்லாந்தேவர்களும் வணங்கப்பெற்றுப் பைரவரைநோக்கிச்சொல்லுகிறார், நீ பிரமன்சென்னி கொய்ததில் அச்சிர முனதுகையில் ஒட்டிக்கொண்டமையால், இனி அம்மண்டையோட்டிற் பலியேற்றுண்டு புண்ணியக்ஷேத்திரங்கடோறுஞ்சென்று முழுகி இறுதியிலே நாம் விளங்கியிராநின்ற ஸ்தலமாகிய கந்தமாதனகிரியிலுள்ள சிவதீர்த்தத்தில் ஆவதுமுடித்து உனதெண்ணப்பிரகாரம் வந்துசேரென் றுக்கியாபித்தவண்ணம் அவர் மேற்படி சிவதீர்த்தத்தில்ஸ்நானம்பண்ணி விரதநோக்கத்தை முடித்துக்கொண்டார். இப்போது அந்தத்தீர்த்தமானது இராமநாதனுடைய சந்நிதானத்தி லிருக்கின்றது, பைரவர்கையிலிருந்த பிரமகபாலத்தைக் காசிக்ஷேத்திரத்திற்கொண்டுபோய்ப் புதைத்துவிட்டார், அவ்விடம் இப்போதும்பிரமகபாலமென ஓர்தீர்த்தமாய்க் காசிக்ஷேத்திரத்தில் விளங்கிக்கொண்டிருக்கின்றது.

---

## ௧௭-வது சங்கதீர்த்த மகத்துவம்.

---

கந்தமாதனகிரிச்சார்பிலே சங்கமாமுனியென்பவர் தவஞ்செய்தார். அவராலேயுண்டாக்கப்பட்டதீர்த்தத்திற்குச் சங்கதீர்த்தமென்று பெயர். வற்சநாபனென்னும் பிராமண சிரேஷ்ட னொருவன் தவஞ்செய்ததில் மேலே புற்றுகளும், விருட்சங்களு முண்டாயிருந்தன. வேதியன் தவத்தைத் தேவேந்திரன் பரீட்சிக்க வேணுமென்று மேகங்களையனுப்பி இடிமின்னல்களுடன் வருஷிக்கும்படிசெய்தார். அதைத் தருமதேவதையோர்ந்து ஒருமகிஷரூபமாய் வந்து நின்று அம்முனிவனைத் தன்மடிக்குளிருத்தி ஓர்மழைத்திவலைகூட மேலே விழாமற்றானே முதுகிற்றாங்கியிருந்தது. மழைகள்வருஷித்தலுத்து ஓய்ந்தோடிப்போனபின்னர் மகிஷம் வெளிப்பட்டு ஒரு சேற்றினி

டை நான்குபாதமுமமிழுகின்றது, பின்பு வற்சநாபனுகிய தவசி கட ந்தனவெல்லாம் பிரமக்கியானத்தாலுணர்ந்து இருப்பிடம்விட்டு வெ ளிப்பட்டு மகிஷத்தைவணங்கிக்கொண்டு வேறொரு இடத்திலிருந்து மெய்ப்பொருளில் மனஞ்செலுத்தும்போது அது கடாமை கண்டு இது நன்றிமறந்ததினுல் வந்தகுற்றம். ஆதலின் இங்ஙனம் பாவியா னேம், இதற்கென்செய்வது? நன்றிமறத்தலுக்குப் பிராயச்சித்தமுமி ல்லையே? இனி யுயிரைவிடுவதுதான்சரியென்றெண்ணி ஓர்வரையில் விழுவதற்கேகுகையில் மீட்டுந் தருமதேவதை நீ உயிரிழக்கவேண் டாம். தென்சமுத்திரக்கரையிற் கந்தமாதனத்தின்கண்ணுள்ள சங்க தீர்த்தத்திலமுழ்கி இராமநாதனைத் தரிசியென்ற உத்தரவுப்படி வற்ச நாபன் ஸ்நானம்பண்ணி அப்பாவம்போக்கினன். இத்தத்தீர்த்தத்தில் தாய்தந்தை குரு இவர்கட்கிழைத்த குற்றமுமொழியும்.

---

## கஅ-கக.உய கயை, கங்கை, யமுனை தீர்த்தமகத்துவம்.

முற்காலத்தில் கந்தமானவரையின்கண் பரமசிவனை நோக்கித் தவமிழைத்த இரயுக்குவ முனிவென்ற வேதியன் பிறவிக் குருடு முடத்தால் ஓர்சிறிய வண்டியிலேறிக்கொண்டு நடவித்திரியலானர், அ வர் யமுனை கயை கங்கையென்னுமூன்றுநதிகளிலும் ஸ்நானம்பண் ண எண்ணமுற்று அவைகளைநோக்கி அன்னுகாரதீத்துமனுவோது அருந்தவஞ்செய்கையில் அவர்க்கு மிகவுந் தினவுள்ள சொறிசிரங்கு முதலிய பிணிகள் சம்பவித்தன. அவைகளையெல்லாம்பொறுத் தவா து தவஞ் சிறந்துவந்ததால் அவர்க்கு அம்மூன்றுநதிகளும் மூன்று ஸ்திரீகளாய்த் தரிசனமாகி அப்பூசுரன் வேண்டிக்கொண்ட பிரகா ரம் பிரவாகமாகப் பெருகிவந்து எங்களை யதாஸ்தானத்திற் றரிசித் து முழுகும்பலனை இங்குங் கொடுக்கத்தரும் என்று கூறியின்று ஜல த்திடைமறைந்துவிட்டார்கள். முனியுமவைகளில் மூழ்கிப் பவித்திர ானர். அம்மூன்றுதீர்த்தங்களு மிப்போது இராமீசர்பதியிலுள்ளன சானருதியென்றும் பௌத்திரனென்றும் பெயருடையவன் மிகவு ம் நீதியாய் உலகமாண்டு அன்னதானங்கள் அனேகிறந்தனவாய்ச்

டை நான்குபாதமு மழிகின்றது, பின்பு வற்சநாபனாகிய தவசி கட
ந்தனவெல்லாம் பிரமக்கியானத்தாலுணர்ந்து இருப்பிடம்விட்டு வெ
ளிப்பட்டு மகிஷத்தைவணங்கிக்கொண்டு வேறொரு இடத்திலிருந்து
மெய்ப்பொருளில் மனஞ்செலுத்தும்போது அது கூடாமை கண்டு
இது நன்றிமறந்ததினால் வந்தகுற்றம். ஆதலின் இங்ஙனம் பாவியா
னேம், இதற்கென்செய்வது? நன்றிமறத்தலுக்குப் பிராயச்சித்தமுமி
ல்லையே? இனி யுயிரைவிடுவதுதான் சரியென்றெண்ணி ஓர்வரையில்
விழுவதற்கேகுகையில் மீட்டுந் தருமதேவதை நீ உயிரிழக்கவேண்
டாம். தென்சமுத்திரக்கரையிற் கந்தமாதனத்தின்கண்ணுள்ள சங்க
தீர்த்தத்தில்மூழ்கி இராமநாதனைத் தரிசியென்ற உத்தரவுப்படி வற்ச
நாபன் ஸ்நானம்பண்ணி அப்பாவம்போக்கினான். இத்தீர்த்தத்தில்
தாய்தந்தை குரு இவர்கட்கிழைத்த குற்றமுமொழியும்.

---

## கஅ-கக.உய கயை, கங்கை, யமுனை தீர்த்தமகத்துவம்.

முற்காலத்தில் கந்தமானவரையின்கண் பரமசிவனை நோக்கித்
தவமிழைத்த இரயுக்குவ முனியென்ற வேதியன் பிறவிக் கால் மு
டத்தால் ஓர்சிறிய வண்டியிலேறிக்கொண்டு நடவித்திரியலானார், அ
வர் யமுனை கயை கங்கையென்னுமூன்றுநதிகளிலும் ஸ்நானம்பண்
ண எண்ணமுற்று அவைகளைநோக்கி அன்னாகாரநீத்துமனுவோதி
அருந்தவஞ்செய்கையில் அவர்க்கு மிகவுந் தினவுள்ள சொறிசிரங்கு
முதலிய பிணிகள் சம்பவித்தன. அவைகளையெல்லாம்பொறுத் தவா
து தவஞ் சிறந்துவந்ததால் அவர்க்கு அம்மூன்றுநதிகளும் மூன்று
ஸ்திரீகளாய்த் தரிசனமாகி அப்பூசுரன் வேண்டிக்கொண்ட பிரகா
ரம் பிரவாகமாகப் பெருகிவந்து எங்களை யதாஸ்தானத்திற் றரிசித்
து முழுகும்பலனை இங்குங் கொடுக்கத்தரும் என்று கூறியின்று ஜல
த்திடைமறைந்துவிட்டார்கள். முனியுமவைகளில் மூழ்கிப் பவித்திர
ரானார். அம்மூன்றுதீர்த்தங்களு மிப்போது இராமேசபதியிலுள்ளன
சானருதியென்றும் பௌத்திரனென்றும் பெயருடையவன் மிகவு
ம் நீதியாய் உலகமாண்டு அன்னதானங்கள் அளவிறந்தனவாய்ச்

த்திற்கு இராமர்கையினால் அபிடேகஞ்செய்யலாயிற்று. இராமருடைய கோதண்டம் கோடியால்வெளிப்பட்ட அந்தத்தீர்த்தத்திற் கப்பொழுது கோடிதீர்த்தமெனப் பெயர்விளங்கா நிற்கும். அதில் கிருஷ்ணமூர்த்தியானவர் நாரதருரைத்தவாறு சங்கற்பப்படி கந்தமாதனத்திலுள்ள தீர்த்தங்களெல்லாமாடிக் கடைசியில் ஸ்நானஞ்செய்து இராமீசுரைத்தரிசித்துக் கஞ்சனைக்கொன்றபழியைநிவர்த்தி செய்துகொண்டு மதுராபுரிபோய்ச் சேர்ந்திருக்கிறார். இந்தத்தீர்த்தமானது மற்றையத் தீர்த்தங்களைப்போலல்லாமல் ஆன்மாக்களை அதிதமோக்ஷத்திற்குமுயர்த்த ஹேதுவாயிருப்பதால், மோட்சத்தை விரும்பினோர் இதில் ஸ்நானம்செய்து புண்ணியம்பெற்றவுடன் யாத்திரைவேறுதீர்த்தங்களில் முழுகுதல் நியாயமன்றென்று, இதைக்கடைசியாய் உபயோகித்துக்கொள்ளப்படும். அப்படியே ஸ்ரீராமரும் நடாத்தித்தமது பதிக்கேகியிருக்கிறார். இராமலிங்கத்திற்கருகிலிருக்கிற இந்தத்தீர்த்தம் மகாபுண்ணியமுளதாதலால், இதைப்பந்தபாசப்பட்டு மரிப்பவர்கள் நாக்கிலூற்றினும் அங்ஙனம்பாசவினை யகலுமென்பது சாமானிய சம்மதமாம்.

---

## உஉ-வது சாத்தியாமுத தீர்த்தமகத்துவம்

---

ஸ்ரீராமலிங்கத்திற்கருகில் சாத்தியாமுததீர்த்தமென ஒன்றுண்டு. அதன்கண் ஸ்நானம்பண்ணினவரெண்ணத்தை அசாத்தியமில்லாதுசாத்தியமாயளிக்கும் நல்லபலனுடைத்து ஆதலின் அதற்குச் சாத்தியாமுததீர்த்தமெனப் பெயராம். புரூரவனென்ற சக்கரவர்த்திக்கு கூ௰௨ மனைவியாயிருந்து ஆயுவென்னுங்குழந்தையைப் பெற்றுக்கொடுத்த ஊர்வசியென்பவள் தேவர்களில் மித்திராவருணனை இகழ்ந்து அவனால்நீ பூலோகத்தில் நானைக்கூடியின்பமனுபவிக்கக் கடவாயென்ற சாபமேற்றுப் புரூரவனுடைய சிங்காரவனத்தில்வந்திருந்து வீணகானஞ்செய்து கொண்டிருந்தாள். அப்போது புரூரவாராஜன் அவளைக்கண்டுசந்தித்து அவள்கேட்டுக்கொண்டபடி அவள்பிள்ளைபோல்வளர்க்கிற இரண்டாட்டுக்கடாக்களை யாவருங்கவர்ந்துகொண்டுபோகாது தான்காக்கிறதென்றும், நிருவாணமாய் அவள்பார்வை

க்கெப் போதாவது தான் காணப்படுவதில்லை யென்றுந் தன்னுடைய உச்சிட்டத்தை அவளுக்குண்பிப்பதில்லை யென்றும், இவைகள் நவறில் அவள் தன்னைவிட்டகன்று தெய்வலோகம்போய்விடலாமென்றும், பரவசஞ்செய்து கொடுத்து நாட்டை மந்திரிபா லொப்புவித்துத் தன்பதிக்கருகிலுள்ள சரஸ்வதி நதி தீர்த்தத்தில் சயித்திர வனத்தில் ஓர் சிங்காரமணி மேடையின்கண் சர்வகாலமும் அவளைப் பிரியாமற் போக பாக்கியங்களை அனுபவித்துக் கொண்டிருக்குங்கால், தேவர்களேவுதற்படி விசுவாவசுவென்னுங்கந்தருவன் இராவிலேவந்து அவ்வாடு இரண்டையும் பிடித்துக்கக்கத்திலிடுக்கிக் கொண்டாகாயத்திற்சென்றான். அப்போது ஆட்டின் சத்தங்கேட்டு, யாரோகள்ளன் கடாக்களையெடுத்துப் போகிறானென் றூர்வசி யரையனுக்குரைத்தாள். உடனே அரசன் கட்கதாரனாய் வெளிப்பட்டுக் கள்வனைப் பிடிக்கவெனச் செல்லும்விரைவில் அவன்வஸ்திரம் நழுவிக்கீழேவிழுந்துவிட்டதறிந்தகந்தருவன், தன்வல்லமையாலே வெளிச்சத்தையுண்டுசெய்தானந் நேரமரசனைப் பின்றொடர்ந்துவந்த ஊர்வசி அரனுடைய நிருவாணக் கோலத்தைக்கண்டு வெட்கிராசன் பரவசந்தப்பிப் போனானென்று மறைந்து தேவருலகம்போய்ச் சேர்ந்தாள். பின்னர்ப்புரூரவன்ஆடுகளையுங்காவட்டனையுங் கண்டு கொளற்கியலா திருப்பிடம்வந் தூர்வசியைக் காணாது பரிதவித்துச்சீமை யெங்குந்திரிந் தலையும்போது குருக்ஷேத்திரத்திற் சில தேவமாதர்களுடன் ஊர்வசியைக்கண்டு என்னைநீபிரியலாமோ என்று வினவினான். அவனுக்குத்தரமாக அவ்வூர்வசி பிரமாணம் பிசகியதாற் பிரிந்தேன். நீர்வருந்தவேண்டாம். பத்துமாதஞ்சென்றிவ்விடம்வாரும், உமது புத்திரனைப் பெற்றளிப்பேனென்றாள். அந்தப்படியந்த அரசனிடம் மேற்சொன்ன ஆயுவென்னுங் குழந்தையை ஊர்வசியீன்றளிக்க அவ்வரசன்பெற்று அன்றிரவு அவளோடு கூடியிருந்தான். அங்ஙனமரசன் அவள்பிரிவாற்றாமையைக் குறித்து வருந்தும் போது ஊர்வசி அரசனே! நீர் தும்புரு முதலானவர்களைச்சந்தித்து அவர்களிடம் நானும்மைச் சேர்ந்திருக்கும் படியான மார்க்கத்தைத் தேடிக்கொள்ளுமென்று சொல்லிப் போயினள். அந்தப்படி புரூரவன் அவர்களைக் கண்டிறைஞ்சி அவ்வரங் கேட்டான். அதற்கந்தத்தும்புரு முதலியோர் உன்னெண்ணப்படி யாகவெனின் இதோ நாங்கள் கொடுக்கிற அக்கினிஸ்தாலியை யெடுத்துக்கொண்டுபோய்மூன்றுகூறாய் அக்கினியெடுத்து யாகாதிகிருத்தியங்களை நடாத்து." அதன்மேல் தேவலோகஞ் சென்று ஊர்வசியுடன் கூடிவாழ்வாய் என்று

உரைத்து மறைந்தார்கள். அவ்வார்த்தை அவன் மதியாமல் அக்கினிஸ்தாலியை அவ்வனத்திற்றனே போட்டு விட்டுச் சென்று பின்னும் விடிந்தவுடன் அதைப் பார்க்கவென வந்து நோக்கினன். அங்கதைக்காணாது ஒரு அரசமரத்தைமட்டும் நூதனமாகக்கண்டான். இஃது அக்கினிஸ்தாலியே யெனக்களித்து அதை வெட்டி உச-அங்குலப் பிரமாணமாய் அரணி செய்து நெருப்புண்டாக்கி மூன் றாகூறாய் வகுத்து அநேகயாகங்களை நடாத்தித் தேவானுக் கிரகம் பெற்றுத் தேவலோகத்துக்குப் போக்குவரத்துள்ளவனாய் ஊர்வசியுடன் சேர்ந்து களித்திருந்தான். அந்நாளன்று இந்திரசபையில் நடனஞ்செய்த ஊர்வசியைப்புரூரவனோக்கி நகைக்கவும் புரூரவனை ஊர்வசி நோக்கி நகைக்கவும் நேரிட்டதால் ஊர்வசியினிர்த்தனம் சுருதிலயத்துக்குக் குறைவாய்க் காணப்பட்டது. அப்போது நிர்த்தனத்துக்குக் கர்த்தாவாகிய தும்புரு வெகுண்டு இந்தப்புரூரவன் இவளைக்கூடாமற் போகக்கடவதென்று சபித்தான். அதைத்தீர்க்கும் வகையாதென்றறுத் துயருடன் அரசன் சொல்லிக் கொள்வதைத் தேவராஜனறிந்துரைத்த பிரகாரஞ் சாத்தியாமுத தீர்த்தத்தில் அப்புரூரவனென்னுஞ் சக்கரவர்த்தி ஸ்நானஞ் செய்தான். அங்ஙனமர்தச் சாபம் நீங்கித் தேவர்கள் பதவியைப்பெற்று முன்போல ஊர்வசியுடன்கூடி அரசாய் வாழ்ந்திருந்தனன்.

---

## உக-வது சர்வ தீர்த்த மகத்துவம்.

---

பிருகுவின் சந்ததியான சுதரிசனனென்னும் புருஷன் பிறவிக்குருடனாயிருந்ததுமன்றிக் கொடிய வியாதியாலும் நரைதிரை மூப்புத்தன்மையாலும் மெய்தளர்ந்து துர்ப்பலமுடையவனாயிருந்தான். அவன், சர்வதீர்த்தங்களிலுமாடவேண்டுமென் றவாவுற்றுச் சிவனடியார்கட்குத் தாழ்வின்றி அன்னம் படைத்து ஸ்ரீராமநாதனாகிய ஈஸ்வரனைச் சதாகாலமுஞ் சிந்தையிலிருத்தி, ஆடிப் பாடிக்கந்தமாதனத்தின் கண்ணே அன்னாகாரந்துறந்து, பக்தவருடன் தவஞ் செய்து கொண்டிருந்ததிற்கிரங்கிக் கயிலாசபதி பிரசன்னனாகி அப்பிராமணோத்தம

னுக்குக் கண்கொடுத்து, என்னூற்றபிகாரம் எவ்விடத்துமுள்ள சகல தீர்த்தங்களையும் அவ்விடத்தழைத்துத் தமது விடையாகிய ரிஷபத்தின்காலால் தோண்டப்பட்ட பள்ளத்தில் அடங்கும்படி கட்டளையிட்டு முனியை நோக்கி நீ இதில் ஸ்நானம் செய்குதி என்றாக்ஞைபித்தார். அதுபோல் ஸ்நானம் பண்ணினவுடனே திவ்வியதேகம் பெற்றுமன்மத சொரூபம் போலப் பால்யப்பிராயத்துடன் விளங்கித் தம்மை வணங்கி நின்ற அம்முனியை அரன் அருட்கண்ணூற்றுஏ சுதரிசனா! நின்நிமித்தம் சகலலோகங்களிலுமுள்ள சர்வதீர்த்தங்களையும் இவணழைத்து நிரப்பி யிருக்கின்றமையால் இதற்குச் சர்வதீர்த்தமென்னும் இன்றுமுதற் பெயர் விளங்கும், இந்தத் தீர்த்தத்திற்கநேக புண்ணிய முண்டாயிருக்கும் என்றருளிச் செய்து மறைந்தனர். பின்னர் சுதரிசனன் முத்திபெற்றனன். அதுதான் இராமீசர்தளியுட் சர்வதீர்த்தமென விளங்கிக் கொண்டிருக்கின்றது.

---

## உச-வது

## தனுக்கோடி தீர்த்த மகத்துவம்.

---

இராமசாமி இராவண சம்மார முடிந்துச் சேதுவழியாய் வந்து சேதுவிற்றங்கி யிருக்கும்போது விபீஷணன் வணங்கிக்கேட்டுக் கொண்டவாறு திருவணைவழியாய் வலியுள்ளவர்கள் ஏனோர்க்குத் துன்பு செய்யும்படி இலங்கையிலிருந்து பிரவேசியாதிருக்க வன்றுகட்டிய திருவணையைத் தமதுபார கோதண்டத்தின் கோடியாற் குறுக்கே கீறியுடைத்து இருசமுத்திரமும் பொருதுமாறு விட்டனர். அதனாலது இராமதனுக்கோடிதீர்த்தமென விளங்காநிற்கும். அந்தத்தனுக்கோடி தீர்த்தமெனுஞ் சமுத்திரத்தில் ஸ்நானஞ் செய்பவர்கட்கு மனவாக்கு காயங்களாற் செய்த சகல பாவங்களும் நாசமாவதுமன்றி அநேக புண்ணியமுஞ் சித்திக்கும். அதிக மகத்துவமுள்ள அதன் பெருமை பேசுதற் கெளிதன்று, அதை நினைத்தாலுங் கேட்டாலுந் தரிசித்தாலும் அங்குள்ள காற்று மேலேபட்டாலும் மிகுவிசேஷமென்னின்

பின்னைப் பேசவேண்டிய பேசேதிருக்கின்றது? இந்தப் புண்ணிய
தீர்த்தஞ் சேது மார்க்கத்தில் கந்தமாதனத்திலுள்ள சகல தீர்த்தங்
களுக்குங் கீழ்க்கடைசியிற் சமுத்திரமாயுள்ளது.

பாரதயுத்தம் பதினெட்டா நாளிரவில் அசுவத்தாமன் துரியோத
னனிடஞ் சேனாதிபதிப் பட்டம் பெற்றுச் சிவபெருமானை நோக்கி
ஒரு முகூர்த்தகாலம் இந்திரியநிக்கிரகங் கண்டு தவஞ்செய்து மகிமை
மையுள்ள வாளாயுதம் பெற்று வந்து பாண்டவரில்லாத நேரம் அவர்
கள் பாசறைக்குட்பிரவேசித்து, அங்கு நித்திரை செய்துகொண்டிரு
ந்த திருஷ்டத்யும்னன் முதலிய சகலரையும் வெட்டிமடித்து உபபஞ்
சபாண்டவர்களாகிய ஐந்து சிசுக்களையும் பாண்டவர்கள் தாமென்று
தலைகளையறுத்துத் துரியோதனனிடங் காண்பித்தனன். அந்தச்சிசுஹ
த்தியாலும் அரையர்களை நித்திரையிற் கொன்ற தோஷத்தாலும் பிடி
க்கப்பட்ட அசுவத்தாமன் தண்டகாரண்யரிஷிகளாலும் காசிப்பிராம
ணராலும் இகழப்பட்டு மனநொந்து வேதவியாசரைத் தெரிசித்தான்.
அவருத்தாரப்படி அசுவத்தாமாவென்பவன் தனுஷ்கோடி தீர்த்தத்தில்
முப்பதுநாள்வரையில் ஸ்நானஞ்செய்து திரிசந்திகாலத்தும் இராமநா
தனைத் தரிசித்து வந்ததில் ஈஸ்வரன் இலிங்கத்திலிருந்து தோன்றிப்
பிரசன்ன தரிசனங்கொடுத்து உன்னைப் பிடித்திருந்த தோஷங்கள் தீ
ர்ந்துவிட்டன என்று திருவாய் மலர்ந்தருளி ஆசீர்வதித்து மீண்டிலிங்
கத்திடை மறைந்து போயினர்.

சந்திரகுலத்து நந்தனென்னுமரசனுக்கு மைந்தனுதித்து அரு
மசிரேஷ்டனாயிருந்த தருமகுத்தனென்னு மரசன் அடவியில் வேட்
டையாடி அஸ்தமித்தநேரத்தில் ஓர் விருக்ஷத்திலேறியிருக்க ஒருகரடி அ
ரசனைப்பார்த்து என்னைக் கண்டு நீர் பயப்படவேண்டாம். நானுமு
டையதுணையாகவே இதிலிருப்பேனென்று உரைத்து அரசனருகிலி
ருந்தது. அப்போது தருமகுத்தனுக்கு நித்திரை மயக்கமுண்டா
வதைக் கரடியறிந்து என்மடியிற் பாதிராத்திரிவரையில் நீர் படுத்துத்
துயிலும். நீர்விழித்ததின்மேலும்முடையமடியில் யானும் அப்படியே
துயிலுகின்றேனென்றதற் கரசனிணங்கி அதன் மடியிற் றலைசாய்
த்துக் கண் வளர்ந்தான். அதுகண்ட சிங்கம் ஏ கரடி உன்மடியிற் சய

ஸித்தவனைக் கீழேதள்ளிவிடு, நானெடுத்துக்கொண்டு வருவேன் என்றது. காடி அதற்கிணங்காதிருந்தது. காடிமடியிற் றுயில்பவன் விழித்துக்கொண்டபின், அவன்மடியில் காடிகள்வளர்கையில் அந்தச்சிங்கம் அரசனைவிளித்துப் பருதியுதயமானால்யான் போய்விடுவேன், போனவுடன் காடிக்கு அச்சமில்லை. அதுவோ பொல்லாத மிருகம். நீ அதைவிரைவிற் கீழேதள்ளிவிடு. யானெடுத்துக்கொண்டு போகிறேன். இல்லையேல் பின்பு உனக்கே அபாயம்வருமென்றது. அதுகேட்ட அரசன் பீதிமிகக்கொண்டபடியே தள்ளினன். உடனேகாடி நகங்களையூன்றிக்கொண்டு கிளையைத்தழுவிப்பிடித்திருந்துகொண்டு அடா சண்டாளராசனே! என்னையறியாத மூடாத்மாவே! நான் பிருகுமகாரிஷியினுடைய பரம்பரையிற்றோன்றிய சானகாட்டானென்னு முனிவன். நினைத்தவுருவெடுத்துச் சஞ்சரித்துத் திரியக்கூடியவன். இப்படிப்பட்ட என்னை நித்திரையில் நம்பிக்கைத்துரோகஞ்செய்த நீ பயித்தியம்பிடித்தலையக்கடவையென்று சபித்துச் சிங்கத்தைப்பார்த்து, ஏ சிங்கம்! நீ அளகேசனென்னுங் குபேரனுடைய மந்திரியாகிய பத்திரனென்பவனன்றோ? நீயும் உன் மனைவியுமாக இமயகிரியருகிற் கிரீடை செய்கையில், ஆங்குச்சமித்தொடிக்கவந்த கௌதமரிஷியைக்கண்டு உன்தேவிமட்டும் வஸ்திரந்தரித்தும் நீமாத்திரம் நிருவாணமாய் நின்றதை அவர்நோக்கிவெகுண்டு இவ்விதமிருகமாய்ப் போகும்படியாகச் சபித்தார். அதனால் எம்போலிகளையுந்தொடர்ந்தனை என்றுசொன்ன நிமிடத்தில் சிங்கத்திற்குப் பூர்வக்கியானந்தோன்றிப் பழைய பத்திரனென்னு மந்திரி சொரூபம்பெற்று உம்மைத் தரிசித்ததாற் சாபவிமோசனமானேனென்று உரைத்து வாழ்த்திக்கொண்டு யதாஸ்தானம் போய்விட்டான். முனிவரும் தன்நோக்கம்போலெய்தினர். புறகம் தருமகுத்தனுக்குப் பயித்தியந் தொடர்ந்துவிட்டது, அதை அவனுடைய தந்தையும் அமைச்சர் முதலானவர்களும் போய் சைமினி ரிஷியிடத்தில் தெரிவித்தார்கள். அவர் நடந்த வகை இன்னதென்று சொன்னதின்மேல் அவர் கிகழ்த்தியவண்ணம் அப்பயித்தியவாசன் இராமதனுக்கோடி தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து, அநேகதானங்கள் வழங்கி அப்பயித்தியத்தை நிவர்த்தி செய்துகொண்டு, இராமநாதனைத் தரிசித்துவேண்டிய ஆபரணாதிகளை ஈட்டித் தன் நகரம் புகுந்து அரசு செய்தனன்.

பிருகத்துய்மனென்னுமரசன் நடாத்திய தீர்க்கசத்திர யாகத்திற்குப் பௌரோகிதர்களா யிருந்தபராவசு, அருவாவசுவென்னுந்

தமையன் தம்பி இருவர்களில் பராவசுவென்பவன் தன் தந்தையாகிய ரயிப்பியன் புலித்தோலைப் போர்த்திருந்ததறியாமற் புலி தான் ஆச்சிரமத்தில் இருக்கின்றதென்றெண்ணித் தன்கைத்தண்டாற் புடைத்தான். உடனே தந்தை இறந்ததைக்குறித்துத் தானுந் தம்பியும் புலம்பியழுது இறுதியில் இளையானைநோக்கிச் சகோதரனே! நான் யாகத்தை நிறைவேற்றுகின்றேன், நீ தந்தைகொலையுண்ட பிரமஹத்தியையேற்றுக்கொண்டு காட்டிற்சென்று தவம்புரிதி என்றபடி இளையோனுமவன் சூரியனைநோக்கித் தவஞ்செய்தபோது சூரியன் தேவர்களுடனே தரிசனமாகிப் பிதா பிழைக்கவென்று வரங்கொடுத்துவிட பின்னர் உன் தமையனால்நேரிட்ட பிரமஹத்தியகல அவனைத் தனுக்கோடிதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்யும்படி செய் என்று தேவர்களெல்லாம் திரோபவித்தனர். அந்தவிதந்தானுந் தமையனாகிய பராவசுவுஞ்சென்று அந்தச்சமுத்திர தீர்த்தத்திற்குடைந்து இராமலிங்க தரிசனங்கண்டு தங்களிருப்பிடம் வந்தவுடன், மரித்தபிதாவை உயிருடன்பார்த்துப் பிரமஹத்திதோஷமுந்தொலைந்து சந்தோஷியாயிருந்தார்கள்.

ஓர் பட்டணத்தருகிலுள்ள கானில் வாசஞ்செய்யும் நரியொன்று சுடலைப்பிணத்தை இழுத்துத்தின்னுகையில் அதன்மித்திரனான மற்கடமொன்று கண்டு, நண்பனே! நீயென்ன பாவஞ்செய்தாயோ பிணந்தின்னுஞ் ஜென்மமானாய் என்றது. அதுகேட்ட சம்பு கேளாய் நேயா! யான்பூர்வம் தேவசன்மாவென்னும் பூசுரனாயிருக்குங்காலத்தில் ஒரு வைதியனுக்குக்கொடுக்கிறதாக வாக்குத்தத்தஞ் செய்த பதார்த்தத்தைக் கொடுக்காமற் போனதினாலேதான் இந்தச் சென்மம் உண்டாயிற்றென்று சொல்லிற்று. அதுகேட்டகபி ஆர்வலா! நானும் முந்தியஜன்மாந்தரத்தில் விஸ்வநாதனென்னும் வைதியனுடையகுமாரன். வேதநாதனென்னை ஆக்குவியம் பெற்றிருக்குங்காலத்தில் ஒருவிப்பிரனுடைய வீட்டுக்கொல்லையின்கண் உள்ள காய்கறிபதார்த்தங்களை வேலியைத்தாண்டிப்போய்த் திருடிக்கொண்டு போய்ச்சமைத்துண்ட தோஷத்தால்தான் இப்படித் தாண்டித்தாண்டித்திரிகின்ற சென்மமானேன், ஆனபடியினாலே நீயுநானும் அக்காலத்துப் பிரியாத நேசர்களாயிருந்ததுபோலவே இக்காலத்திலும் பிரியாத் தலைப்படி ஒன்றுபட்டிருக்கிறோம். அல்லாமல் இப்பிறவி வாய்க்கு

முன்னம் சிவபணிவிடை முதலிய கயிங்கரியங்களை நான் செய்திருத்தல் குறித்து, இப்பவத்தும் பூர்வக்கியானம் கலந்திருக்கின்றதென்று. இவ்விதம் பாவிக்கொண்ட இரண்டு பிராணிகளும் இந்தச்சென்மம் எப்படிக் கடைத்தேறு மென்றுருக் கவலையுடன் ஊணுறக்கமின்றி இருக்கும்வேளை ஆண்டுவந்த சிந்துதீப முனியைக்கண்டடிவணங்கித் தங்கள் குறையை விண்ணப்பித்துக் கொண்டன. அதுதெரிந்த அம் முனிவர் சொற்பிரகாரம் ஸ்ரீசேது தனுக்கோடி தீர்த்தத்திற்றனே ஸ்நானஞ்செய்து கொண்டு அவண் வாழ்ந்திருந்த அக்கபிக்குஞ் சம்புவுக்கும்தேவலோகங்கிடைத்துத் தேவபோகங்களை யனுபவிக்கப்புண்ணியமுண்டாயிற்று. உடனே அவர் தேவ விமானத்தி லேறித் தேவலோகம்போய் இந்திரனோடிருந்து போக பாக்கியங்களை அனுபவித்துக் கொண்டிருந்தனர்.

மாராஷ்ட் தேசத்திலுள்ள எச்ச தேவனென்னும் நற்பிராமணனுக்குச் சுமதியென்னும் ஒரு அற்புத்திரன் பிறந்து, தன்பதிதுறந்து புற்கலமென்னுந் தேசம் புகுந்து ஓர் வேடுவச்சிறுமியுடன் கூடி அவளுக்காகப் பொருள் கொணர்ந்தளித்தும் பிராமணீகத்தை மறந்து வேடரோடு வேடனாகத் திரிந்துயிர்வதை செய்து ஊனுண்டு கட்குடித்துத்திரியுங்கால் ஓர்வேதியன் வீட்டிற் கள்ளஞ்செய்து அவ்வேதியனையுங் கொன்றுவிட்டான். அங்ஙனம் அவனைப்பிரமஹத்திவந்து பிடித்துக்கொண்டலைக்கும்போது தெய்வாதீனமாயூர்சேர்ந்துதன்றந்தையிடஞ் சென்றான். அங்ஙனம் எச்சதேவனைப் பிரமஹத்தி நோக்கி இவன் பிராமணனைக் கொன்றான், கட்குடித்தான், பொன்திருடினான். உங்களுக்குதவாமற் புரிந்தனுளன். ஆதலால்நீ இவனுக்கிரங்காதே. இரங்குவையேல் உன்னையும் உன் மனைவியையும் கொல்வதுமன்றி உன்குல முழுவதும் நாசஞ் செய்வேனென்றது. அவ்வசன மோர்ந்த எச்சதேவன் புத்திரனைவிடுக்க மனமில்லாதிருப்பதைப் பிரமஹத்தி கண்டு வெகுண்டு தன்கையினால் சுமதியினுடைய உடம்பிலே என்பு முறியும்படி ஓங்கியறைந்தது. அவ் வறையுண்ட சுமதியானவன் அலறிக்கொண்டு நிலத்தில் விழுந்தனன், தந்தையாகிய அந்தணன்றனது ஏகபுத்திரனாகிய சுமதிபடுந் துன்பத்தைக் கண்ணுற்று மனமாற்றமல்மிகவும் வருந்திக் கொண்டிருந்தனன். அப்பொழுது அம்மனையில் துர்வாச மகாரிஷி வந்தார். அவரைத் தாயுந்தந்தையும் வணங்கிப் புத்திரனுக்கு உண்டாயிருக்கின்ற விபத்தைப்பற்றி விண்ணப்பஞ் செய்யத்தேர்ந்த அவ்விருடி உரைத்தவண்ணம் எச்சதேவன் தன்மக

கோடியில் தன்
னுகிய சுமதியைக் கூட்டி வந்து இராமதனுக் கோடியில் தன்
னோடு ஆறுமதிவரை ஸ்நானஞ் செய்வித்தான். அந்நான்று பிடித்தி
ருந்த பிரமஹத்தியும் மற்றுந்தோஷமுந் தொலைந்து திவ்யபுருஷனுக
ச்சுமதி விளங்கினன் என்று அசரீரி வாக்குண்டாயிற்று. அப்பாற் பி
தா புத்திரனை அழைத்துக் கொண்டு இராமலிங்க தரிசனஞ் செய்துயர்
புக்கு வாழ்ந்திருந்தான்.

பாண்டியதேச வாசியாகிய இத்துமவாகனென்னும்பிராமணனு
டைய மனைவி மஹாரூபவதியா யிருந்தாள். அவள் நல்லபருவத்தில்
துர்விநீதனென்னும் ஓராண் குழந்தையை ஈன்றபின் இத்துமவாகன்,
நிரியாண மெய்திவிட்டான். அப்பால் தாயும் பிள்ளையும் பாண்டியநா
ட்டி லுய்யுங்கால் துவாதச வருஷம் வானிரங்காதுலகம் வருந்துங்கா
ரணம்பற்றி அவ்விருவருங் கோகர்ணமெனும் பதியடைந் துயிர்வா
ழ்ந்திருந்தார்கள். அப்போது பால்யதிசை யடைந்திருந்த புத்திரனு
கிய துர்விநீதன் காமவிடாய் கொண்டு தாய்பேரில் மோஹித்து மாது
ருகமனஞ்செய்து அவ்விடாய் தணிந்த பின்பு தான் செய்த செய்கை
பெரும்பாவமென வலித்து, எண்ணரிய துக்கசாகரத்திலழுந்தி மகரி
ஷிகளுறையும் தானமெய்தி, அவர்களிடம் தன்கொடும்பவந் தொலை
தற்குபாயமருள்கவெனக்குறையிரந்துகொண்டான். அந்நான்றுவேவ
தவியாசருக்குக் கருணைசுரந்து அடாபாவி! பதிதா! நீயுமுன்றாயும்இரா
மதனுக்கோடி தீர்த்தத்தில் உத்தராயண புண்ணியகாலத்தில்சூரியன்
மகரத்துக்குவந்த திங்களில் சந்திர சூரியர் சேர்ந்த அமாவாசியில் உ
ஷற்காலத்தில் சங்கற்பப்படி ஸ்நானஞ்செய்து நீசெய்த மாதுருகமன
தோஷத்தைத் தீர்த்துக்கொள் என்றுத்தரவு செய்த பிரகாரம் தாயும்
மகனும் முப்பது தினம் வரை அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து
இராமீசரைத் தரிசித்து மறுபடியும்வியாசரைக் கண்டு வணங்கி அவர்
சொன்ன நற்போதங்களைச் செவிகுளிரக் கேட்டுக் கோகர்ணஞ் செ
ன்று துர்விநீதன் ஒரு பெண்ணை விவாகம் செய்து கொண்டு வாழ்
ந்திருந்தான். கடைசியில் அம்மாதாவு மகனும் நற்கதி புகுந்தார்கள்.

* கௌதம நதிக்கரையில் அசாரமற்ற துராசாரனென்னும் ஓர்
விப்பிரன் பதிதனாய் பாதகரோடுகூடி அக்கிரத்தியங்களையே செய்து
கொண்டிருந்தான். அதனால் அவனை ஒரு வேதாளம் பிடித்துக்கொ

* கௌதம நதி-கோதாவரி.

ண்டு அகோராத்ரமாகப் பலவிடங்களையுந் திரிந்தலையும்படி செய்து வருவதாயிற்று. அஃது ஓர்நாள் அவனைத்தனுக்கோடி தீர்த்தத்தினருகிலு மழைத்துக்கொண்டுவந்து இந்தச் சமுத்திரத்திலிவனை அமிழ்த்திவிடுவோமென்றமிழ்த்தின நிமிடம் வேதாளம் அலறிக்கொண்டேகி முன்சன்மத்திற் பாத்துவாசருடைய புத்திரனாய் வேதநிதியென்னும் பிராமணனாயிருக்குங்கால் கன்யாமாசமாகிய புரட்டாசி மாதங்கன்னியிற் சூரியன்வருகிறபோது சந்திரன்கலை குறைந்த மாளயபட்சமான புண்ணியகாலத்திற் பிதிர்தேவதைக்குரிய மாளயசிரார்த்தம் அக்கினி ஹோத்திரங்களைச் செய்யாதிருந்த குறைவால் நீ வேதாளமாய்ப் போகக்கடவை என்று பிதிர்க்கள் கொடுத்த சாபந்தீர்ந்து தேவதேகம் பெற்று மால்பதமடைந்தான். துராசாரனும் பரிசுத்த ஹிருதயமுடையவனாய் இவ்விடம் யாதோ? எப்படி இங்குவந்தோமெனச் சிந்தித்துநிற்கையில் ஆங்கு ஸ்நானத்திற்காகத் தத்தாத்திரேய முனிவர் வந்தார். அவரைத் துராசாரன் வணங்கிச் சங்கதி வினவினான். அதுபற்றி அம்முனிசிரேஷ்டர் ஒருமுகூர்த்தமளவுஞ் சித்தத்தை நிலைநிறுத்திநோக்கி அவ்வேதியன் பூர்வமெல்லாங் கியானத்தாலுணர்ந்து நடந்த விர்த்தாந்தங்களை யுபதேசித்தனுப்பப்பட்டபின் அவன் தன்னூர் சேர்ந்து கிரமப்படி மாளயசிரார்த்தங்களை நடாத்தி அந்தியத்தில் நற்கதிபுக்கினன்.

தாய்தந்தையர் மரித்த திதிகளிற் சிரார்த்தஞ் செய்யாவிடினும் மேற்கூறிய மாளயசிரார்த்தம் அவசியஞ்செய்யவேண்டும். அஃது புரட்டாசிமாதமுதற் கார்த்திகை மாதம்வரைகூடும் ஆயினும் புரட்டாசிமாதத்து அபரபக்கமே சிலாக்கியம். அப்பக்கத்திற் சூதகமுதலிய இடையூறு ஏதேனுமுண்டாயின் அதன்பின்வருந் திதிகளையுபயோகப் படுத்துவதென்றால் இச்சிரார்த்தம் உத்தம வேதியர்களை விளித்தியற்றியூட்டவேண்டும். இல்லையேற் சிரார்த்தம் நாசமாம். இச்சிரார்த்தத்தில் தந்தைவழியின் மூவருக்குந் தாய்வழியின் மூவருக்கும் விசுவதேவரிருவருக்கும் விஷ்ணுவொருவருக்குமாக ஒன்பது வேதியருக்குத் திருப்பணிசெய்யவேண்டும். வறியனாயின்தந்தைவழி தாய்வழி யென்ற இரண்டிற்கும் விசுவதேவர் விஷ்ணுவென்ற இரண்டிற்குமாக நான்கு வேதியர்கட்கு ஊட்டலாம். தன்கையிலொன்று மில்லாதவன் வேதியரிடம் யாசித்தேனுமியற்றுக. அரிதெனின் அரைய

ரிடம் யாசித்தியற்றுக. அரிதெனின் வணிகரிடம் யாசித்தியற்றுக. அரிதெனின் சற்சூத்திரரிடம் யாசித்தியற்றுக. அரிதெனின் பாற்பசுவுக்கேதேனும் வாயுறையிடுக. அரிதெனின் விலங்குகள்வசிக்கிற காட்டிற்சென்று இருகரங்களாலும் வயிற்றின் மோதிக்கொண்டு கதியிலேன் என்செய்வேனெனக் கண்ணீருகுத்து எமது பிதிர்க்களே! கேண்மின்! எதுமிலேன். தருவாருமிலர். அருளுண் மாளயமாற்ற வலியற்றேன். கருணையுடன் பிழைபொறுத்தருண்மினென வாயான்முழக்கல்வேண்டும். இவ்வண்ணஞ்செய்யின் அளப்பில்லா அந்தணருக் கருத்துமின்பந் தென்புலத்தார்க்குளதாகும். செய்தவனும் எல்லா நலமுமடைவன். இச்சிரார்த்தத்திற்குப் பதிதர் காத்திருந்து யாதொன்றும் யாசித்துபயோகிக் கொளுது. இயன்றபூரியும் அவசியங் கொடுக்கவேண்டும். இன்னமும் புரட்டாசி மாதமுழுதும் ஒரு பூசுரனுக்கே யூட்டினும் ஐப்பசிமாதத்தில் அபரபக்கத்திலூட்டினும் அபரபக்கத்துச் சப்தமி துவாதசி தொடங்கி அமாவாசையளவும் மூன்று பூசுரருக்கு ஊட்டினும் நன்மையுண்டாம். இதை மகவில்லாக்கன்னியும் புருடனிமித்தஞ் செய்யவேண்டும்.

இன்னமுமிப்படிக் காயபாவநிவாரண சரித்திரங்கள் இராமதனுக்கோடிக்கு அளவிறந்தனவுள. அவைகளை நவில்வதெனின்யாவர்க்கும் அசாத்தியமென்றறிக. இம்மட்டிற்சேதுவிற் பிரதானமான இருபத்து நான்கு தீர்த்தங்களின் விவரங்களையுஞ் சுருக்கிச்சொல்லலாயிற்று. இதன்மேலுஞ் சொல்வதியாதெனின்:

---

## உரு-வது

## பாலோடை தீர்த்தமகத்துவம்.

---

முற்கூறிய தேவிபட்டினத்திற்கு மேற்பாரிசமாய்ச் சேதுவில் புல்லாரணியமென்னும் வனத்தில் தக்ஷிணபக்கம் ஸ்ரீராமச்சந்திரன் தருப்பையிற் சயனம்பண்ணிய இடமே இப்பொழுது திருப்புல்லாரணியமெனப் பெயர் விளங்கிக்கொண்டு ஒரு க்ஷேத்திரமாகவிருக்கின்றது, அவ்விடத்தில் (க்ஷீரகுண்டம்) பாலோடையென்று ஓர் தீர்த்முண்டு, அதன்வரலாறேதென்னில், முற்கலமாமுனிவர் அவ்விடத்

இல் விஷ்ணுவைக்குறித்துத் தவமிழைத்து ஒருயாகமுஞ்செய்தார். அப்போது விஷ்ணு, லட்சுமி சமேதராய்ப் பிரசன்னராகி, அவிர்ப்பாகமுண்டு அம்முனிவர் க்ஷீரயாகஞ்செய்யவேண்டும், அதற்குக் காலைமாலை இரண்டுகாலங்களிலும் பால்குறைவில்லாதிருக்க அனுக்கிரகஞ் செய்குதியென்று கேட்டுக்கொண்டபடி அவ்வழித்தானே விஸ்வகருமாவினால் விசித்திரமான தடாகங்கட்டுவிக்கும்படிக்கும், அதனிடைக் காமதேனுவைப் பால்கறந்து அக்காலங்களில் நிரப்பும்படிக்குந் திட்டஞ்செய்து அதற்கு முதற்பாலோடையென்று பெயர் விளங்கும். இதனிடை ஸ்நானம்பண்ணினவர்கள் பவித்திரராவார்கள் என அனுக்கிரகஞ்செய்தபடி ஓர்தீர்த்தமாய் விளங்கிக்கொண்டிருக்கிறது. அங்ஙனே அம்முற்கலமுனி பலயாண்டு வேள்விசெய்து, முடிவில் விஷ்ணுவுருவடைந்தனர். காசிபர்மனைவிகளாகிய வினதையென்பவளுங் கத்துரு என்பவளுந் தேவேந்திரனுடைய சுவேதப்பரியாகிய உச்சைச்சிரவத்தைக்கண்டு கத்துரு இப்பரியின் வாலிற் கறுப்பிருக்கிறதென்ன, வினதை, அல்லவென்றாள். உடனே இருவருக்கும் வாக்குவாதம்வந்து சொன்னபடி மெய்ப்பிக்காதார் மெய்ப்பித்தார்க்கு அடிமையாவதென்று சபதஞ்செய்து கொள்ளலானார்கள். அப்போது கத்துரு தன்மக்களாகிய சர்ப்பங்களையழைத்து, நீங்கள் உச்சைச்சிரவத்தின்வாலிற் கறுப்புண்டாக்குங்களென்றாள். அதற்குக் கார்க்கோடகன்தவிர மற்றப்பாந்தள்களொவ்வாமல் தாயிட்ட சாபத்திற்குள்ளாயினர். கார்க்கோடகனெனவன் தேவலோகஞ்சென்று சுவேதப்பரியின்வாலில் தன்னது சாமர்த்தியத்தாற் கறுப்புக்காட்டி வினதையையும் அவள் புத்திரன் கலுழனையும் அடிமைத்தாங்கொண்டவஞ்சகக்குத்திரத்தைக் காசிபர்தெரிவித்தபடி ஒருக்கவென்று கத்துருவும் அவள் பிள்ளைகளான நாகங்களும் பாலோடைக் கரையையெய்தி அவ்வோடையில் மூன்று பகல் கத்துரு ஸ்நானஞ் செய்தனர். அப்பொழுது உனது தீமை தீர்ந்தது என்று அசரீரிவசனம் பிறந்தது. அதைக் கேட்டு மகிழ்வெய்திய தாயுமக்களுந் தங்கள் பதியுறைந்து வாழ்ந்திருந்தனர்.

---

ௐ

கடவுள் துணை.

# ௨௯-வது கபிதீர்த்த மகத்துவம்.

---

ஸ்ரீராமருடைய சைன்னியங்களான வானரகணங்களெல்லாம் ஓர் தடாகமுண்டுசெய்து அதில் ஸ்நானம் பண்ணிக் கரையேறி இதற்கநேக புண்ணிய முண்டாயிருக்கக் கடவதென்று வரங்கொடுத்தன. பிறகும் அவைகள் காகுத்தனைப் பணிந்து தேவரீர் இந்தத்தீர்த்தத்திற்கு நல்லவரங்களுண்டாகக் கடாக்ஷிக்க வேண்டுமெனலும், ராகவன்களிசிறந்து கங்கை பிரயாகையாதி நதிகளில்மூழ்குகிறபலனும் வேதநான்குமோதுகிற பலனும் சிவனை விஷ்ணுவைப் பிரமனை வழிபடுகிறபலனும் மஹாமந்திரம் பல ஓதுகிறபலனும் இதற்கிடை சிறந்தவர்கட்கு உண்டாகுக என்றருளினன். அஞ்ஞான்று அவ்வரத்தை வழுத்தி அயன் ஆதித்தன் சந்திரன் இந்திராதி எண்டிசைப் பாலர் விசுவதேவர் வசுக்கள் சாத்தியராதிவானோர், குற்சகர், அத்திரி, பிருகு, கௌதமர், அகஸ்தியர், கண்ணுவர், கோசிகர், சுநீக்கினர், பாராசர், ஜனகர், நாரதர் முதலிய மாதவரனைவரும் இத்தீர்த்தில் மூழ்கி இது கபிதீர்த்தமென்கிற பேர் கொண்டு நீடூழிவிளங்குகவென்றருளினர். இத்தீர்த்தம் சேதுவில் இராமேசருடையபதிக்கு மேற்குத்திக்கில் ஆறுகடிகைவழி தூரத்திலிருக்கின்றது. இந்தத் தீர்த்தமிருக்குந்தலத்தை இப்போது பாம்பன் எனப்பெயர் பண்ணுவர். முற்காலத்திற் காதிமைந்தனான கௌசிகர் வசிஷ்டரைப்போல் தாமும் பிரம்மரிஷியாக வேண்டுமென்றுவடதிசையில் ஓராரண்யத்தில் கௌசிகநதிதீரத்தில் புலன் பொறிகளை யொடுக்கி விடயங்களில் விருப்புவெறுப்பின்றி ஆனி ஆடிமதிகளிற் பஞ்சாக்கினி மத்தியிலும் மாசி பங்குனியில் ஜலத்திலும் புரட்டாசி ஆவணி மற்றத்திங்களில் வெள்ளிடையிலும் நிருவாணமாய் நட்டகற்போல் தேவ வருஷத்தில் ஆயிரமாண்டு தவஞ்செய்தார். அதை அழிக்கவென்று உம்பர்களாலனுப்பப்பட்ட அரம்பையானவளை விசுவாமித்திரர் வீக்ஷணித்து நீகல்லாய் நிற்குதி என்று சபித்தார். அந்தப்படி அவள் பதினாயிர வருஷம் நின்ற

பொறி ஆங்கு அரனைக்குறித்துத் தவமியற்றிய அகஸ்தியர் சிஷ்யனா
கிய சுவேதமாமுனிவருடைய நோன்புக் கிடையூறு விளைத்த அங்கா
ரகையென்னும் இராக்ஷத ஸ்திரீயைக் கொன்று விடென்று அம்மு
னிவர் அரம்பையாகிய கற்சிலையை யேவினார். உடனே சிலையுமவளைத்
துரத்திக்கொண்டேயாமியத்துக்கு நோக்கிச் சென்றது. இறுதியிலந்த
இராட்சசியானவள் கபிதீர்த்தத்தின்கண்ணே வீழ்ந்தாள். தொடர்ந்து
வந்த கல்லுருவானது, அவளையமிழ்த்திவதைத்து அந்நீரில் நனைந்த
வுடனே பண்டை அரம்பையாகி இராமலிங்கத்தை வணங்கிக்கொண்
டு தேவருலகு புக்கனள். அரக்கியானவளும் கபிதீர்த்த மகத்துவத்
தால் முந்திய அகஸ்தியர் சாபந் தவிர்த்து தேவப் பெண்ணாகிய கிரு
தாஎன்னும் பழைய சொரூபம் பெற்று அமரருலகெய்தினாள். [கபி-
குரங்கு.]

---

## ௨௭·௨ அ-வது,
## சரஸ்வதி, காயத்திரி தீர்த்தமகத்துவம்.

---

முற்காலத்தில் சிருஷ்டிதேவனாகிய பிரமாவானவர், மிகச்சௌந்
தரியவதியாகிய வாக்கின்தையல் வாணியென்னும் ஓர்பெண்ணையுண்டு
பண்ணி, அவளைக்கூடற்கு மோகித்தார், அதுதெரிந்த அப்பெண்
சம்மதியாது ஓர்மானாகச் செல்லுகையில் பிரமா கலையாகத் தொடர்ந்
தார். அஃதோர்ந்த கருணாசகாயசுவாமியாஞ் சிவபெருமானார்வில்லு
ம் அம்புங்கைக்கொண்டு ஓர்வேடனா யெதிர்ப்பட்டுக் கலையாந்திய
ற அயன்பேரில் ஒருபகழியைவிட்டுச் சிரசைக்கண்டித்து உயிரைவா
ங்கிவிட்டார். அதுதெரிந்த சரசுவதியும் காயத்திரியும் தங்கணாயக னு
யிர்பெறும்படி கந்தமாதனத்தின்கண் இரண்டுதீர்த்தங்களை யுண்டு
செய்து கொண்டு அவற்றினிடமாய்த்திரிசந்தி காலத்தும் ஸ்நானஞ்
செய்து கிரமப்படி பஞ்சாட்சர மந்திரத்தை யுச்சரித்தபடியே நெடு
நாளாக நல்லதவத்தைச் செய்தார்கள். அதற்குப் பரமசிவன் காக்ஷி
கொடுத்துப் பிரமதேவன் உயிர்பெறும்படிசெய்து அவனுக்கு வேத
நீதிகளைப்போதித்து, அவ்விரண்டு தீர்த்தங்கட்கும் நல்லவரப்பிரசா
தம்நல்கி, அந்தர்த்தனமாய் ஆவாணித்துவிட்டார். அந்தத்தீர்த்தங்

களிரண்டும் சரசுவதி தீர்த்தமென்றும், காயத்திரி தீர்த்தமென்றும், பெயர் பெற்று இராமேசர் பதியிலிருந்துகொண்டிருக்கின்றன.

அபிமன்னுவின் புத்திரனை பரிச்சித்து ராஜாவுக்குச் சிரிங்கிரிஷிசாபத்தால் தக்கன் தீண்டுவானென்ற பயமுண்டாகிச் சமுத்திரத்தின்மே லிருப்பிட முண்டாக்கி அங்கேதானே அவ்வரசன் இருக்கையில்அவ்வவதாம்தக்கனாகிய பாந்தள் ஓர் பிராமணனுருகச் சமுத்திர கரையிலுலாவிற்று. அப்போது காசிபனென்னும் வேதியனாகிய மஹா விஷமந்திரவாதி இவ்வேதியனைக் கண்டு தன் மந்திரபலத்தை வழுத்தி அங்ஙன் விஷாக்கினியால் தக்கன் பட்டுப் போம்படி செய்த வட விருட்சத்தை முற்போலத் தளிர்த்திருக்கும்படி செய்தான். அதை அந்த நாகமெச்சி அநேக நாகமணிகளை யுமிழ்ந்து இவைகளை நீரெடுத்துக்கொண்டு போம். என்னியதியை முடித்துக் கொள்கிறேனென்றதற்கிணங்கி அம்மணிகளைக் கைப்பற்றிச்சென்ற காசிபன்பரிச்சித்துபாம்புகடித்திறந்தா னென்னுமொழி வெளிவந்ததன்மேல் யாவராலும் நிந்திக்கப்பட்டான். அப்பாற்காசிபன் மனதாரச்செய்த பிழையைப் போக்கவென்று சாகல்லியமாமுனிவர் சாற்றியபடி சாசுவதி, காயத்திரியென்னும் இரண்டுதீர்த்தங்களிலும் ஸ்நானம்பண்ணியிருந்தனன். அப்போது அவ்விரண்டு சத்திகளுந்தோன்றி, அறம்வளரும் படிக்கும் மறமொழியும்படிக்கும் இராசனுரோகந் தொலையும்படிக்குங்கடாட்சித்து அந்தடங்களுடன் மறைந்துபோனார்கள்.

---

## உக-வது
## இரணவிமோசன தீர்த்தமகத்துவம்.

---

கந்தமாதனத்தின் ௰உ-வது ஏகாந்த ராமசாமி கோயிலுக்கு வடபுறம் இரணவிமோசனமென ஒரு தீர்த்தமுண்டு. அதில் ஸ்நானஞ் செய்பவர்களுக்கு இரணமென்கிற மூவகைக் கடனுந் தீர்ந்து பவித்திர முண்டாம். ஏனைய கடனுந்தீரும். தரித்திரமுமகலும். மூவகைக்கடன் யாதெனில், ரிஷிதபோதனர்கள் கடன், தேவாதிகள் கடன், பிதிர்க்கள் கடன் என்றும். பிரமசரியதிலையில் வேதாகம புராண விசாரணை யில்லாத ரிஷி தபோதனர்கள் கடனாகும்.

யாகாதி கிருத்தியங்க ளியற்றாதது தேவாதிகள் கடனாகும். புத்திரப் பேறில்லாதது பிதிர்க்கள் கடனாகும்.

---

௬0-வது.

பாண்டவதீர்த்த மகத்துவம்.

பாண்டவர்கள் ராஜசூயயாகம் நிறைவேற்றுமுன் இலட்சுமி தீர்த்தமாடவந்தகாலத்தில் அவர்களாலுண்டுபண்ணப்பட்டது பாண்டவதீர்த்தமாகும். அதுவும் கந்தமாதனச்சாரிலிருக்கின்றது. அதில் ஸ்நானஞ்செய்பவர்கட்கும் புநிதம் லபிக்கும். அவ்விடத்திற் பிராமண போஜனஞ் செய்விக்கின் மிக்கபலன் சித்தியாம்.

---

௬௧-வது தேவதீர்த்த மகத்துவம்.

தேவர்கள் மகேசுரயாகஞ்செய்தபோதுண்டாக்கியது ஒரு தீர்த்தம். அது தேவதீர்த்தமெனப் பெயர் விளங்கிக்கொண்டு கந்தமாதனச்சாரலிலிருக்கின்றது. அதனுடைய ஸ்நானமும்மிகுவிசேஷமே. இஷ்டகாமியசித்தியை அளிக்கும்.

---

௬௨-வது சுக்ரீவதீர்த்தமகத்துவம்.

வானரராஜனாகிய சுக்ரீவனாலுண்டாக்கப்பட்டது ஓர் தீர்த்தம். அது கந்தமாதனச்சாரில் சுக்ரீவதீர்த்தமெனப் பெயர்விளங்காநிற்கும். அதனுடைய ஸ்நானமும் மிக்க மகத்துவமுள்ளதே.

---

௬௩-வது நளதீர்த்தமகத்துவம்

சேதுபெயர்ப்பியாகிய நளனால் உண்டுபண்ணினது நளதீர்த்தமாகும். அதுவும் ஸ்நானஞ்செய்பவர்கட்கு நல்ல புண்ணியம் நல்கிக்கொண்டு சேதுவிலிருக்கின்றது.

---

௬௪-வது நீலதீர்த்தமகத்துவம்.

நீலனென்பவ னுண்டுபண்ணியது நீலதீர்த்தமாகும். அதுவுந் தன்பாலடைபவர்கட்குத் தக்கசுகத்தைக்கொடுத்துக்கொண்டு சேதுவிலே இருக்கின்றது.

௩௫-வது பசுக்கண்ணதீர்த்தமகத்துவம்.

வானரவீரனான பசுக்கண்ணனாலுண்டாக்கியது பசுக்கண்ண தீர்த்தமாகும். அதுவும் தன்னிடத்தில் ஸ்நானஞ்செய்வோருக்கு நற்பலனையுதவிக்கொண்டு சேதுவிலிருக்கின்றது.

௩௬-வது அங்கததீர்த்தமகத்துவம்.

இது வாலிமகனான அங்கதனாலுண்டாக்கப்பட்ட தீர்த்தம்.

௩௭-வது கயதீர்த்தமகத்துவம்.

இது கயனாலுண்டாக்கப்பட்ட தீர்த்தம்.

௩௮-வது சரபதீர்த்த மகத்துவம்.

இது சரபனா லுண்டாக்கப்பட்ட தீர்த்தம்.

௩௯-வது நளதீர்த்தமகத்துவம்.

இது நளனாலுண்டாக்கப்பட்ட தீர்த்தம்.

௪௦-வது பனசதீர்த்த மகத்துவம்.

இது பனசனாலுண்டாக்கப்பட்ட தீர்த்தம்.

௪௧-வது கவயதீர்த்தமகத்துவம்.

இது கவயனாலுண்டாக்கப்பட்ட தீர்த்தம்.

௪௨-வது குமுததீர்த்த மகத்துவம்.

இது குமுதனா லுண்டாக்கப்பட்ட தீர்த்தம்.

மற்றும் வானரவீரர்களா லுண்டாக்கப்பட்ட தீர்த்தங்களுஞ்சேதுவிலிருக்கின்றன. அவைகளில் தோய்பவர்கட்கும் நல்ல க்ஷேமாரோக்கியமுண்டாகும்.

௪௩-விபீஷணதீர்த்தமகத்துவம்.

இராவணன் சகோதரனாகிய விபீஷணனாலுண்டுசெய்த விபீஷணதீர்த்தமுஞ் சேதுவிலிருக்கின்றது. அதன்ஸ்நானபலனும் விசேஷமென்றறிக.

௪௪-௪௫-௪௬-௪௭.

விபீஷணன் மந்திரிகளான வீரன், வீரகேதனன், நாரணன், நாரணீயன் என்பவர்களுண்டாக்கிய நான்குதீர்த்தங்களுஞ் சேதுவில் அவரவர்பெயரால் விளங்கிக்கொண்டிருக்கின்றன. அவைகளிற் றோய்பவர்களும் நல்லபலன் எய்துவார்கள்.

## ௪௮-வது நாகதீர்த்தமகத்துவம்.

அனந்தாதி அஷ்டநாகங்களால் நிருமித்த நாகதீர்த்தமொன்று சேதுவிலுண்டு. அதனுடைய முழுக்கும் மகிமையுள்ளதே.

இன்னமும் கந்தமாதனச் சார்பெங்கணுந் தேவர்களாலு முனிவர்களாலுந் தங்கள் தங்கள் புண்ணியபலன்களாற் பலசமயத்துமுண்டாக்கப்பட்ட தீர்த்தங்கள் பலவுண்டென்றும் இங்ஙனம் அறிதற்பாலது. அப்படியே இராமேசருடைய தரிசனமும் கயிங்கரியங்களும் சொலற்கரிய மகத்துவமா யிருக்கிறதென்றும் அறிக.

---

## ஸ்ரீராமசுவாமி
## அர்ச்சனைசெய்த மகத்துவம்.

---

அப்படி. வேதவியாசர் மாணாக்கராகிய சூதமகாருஷியிடத்தில் ஸ்ரீராமநாதனுடைய மகிமைகளைக்கேட்ட ரிஷிகளெல்லாம் மகா ஆனந்த சந்தோஷங்களையடைந்து விண்ணப்பஞ் செய்கிறார்கள். எப்படியென்றால், வாரீர் சூதமகாரிஷியே! தேவரீருடைய மகிமையை நாங்களென்னவென்று சொல்லப்போகிறோம்! தமிழ்ச் சாகரத்திலே நீந்திக் குளித்துத் திரிபவர் தேவரீரேயல்லாமல் வேறே யொருவரையுங் கண்டதுமில்லை. தேவரீருக்கு ஒப்புச்சொல்லவும் மற்றொருவரையுங்காணோம். அல்லாமலும் வேதவியாசமகாரிஷியினுடைய அநுக்கிரகங்களைப்பெற்று சகலகேள்விகளையும் அறிந்திருக்கிறீர். தங்கள்வாக்கினால் சேதுமகத்துவத்தைக்கேட்ட எங்களுக்கு வேறேயொன்றுந் தேவையில்லை. ஆகிலும் ஒரு உத்தரங் கேட்கிறோம். அளவற்ற மகிமைபொருந்திய ஸ்ரீராமநாதனைத் தசரத குமாரராகிய ஸ்ரீராமச்சந்திரமூர்த்தி எப்படிப் பூசைபண்ணினார்? அந்தக் கிரமங்களை யெங்களுக்குச் சொல்லவேணுமென்று நைமிசாரண்யத்து ரிஷிகள்கேட்க, சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினார்:

கேளுங்கள் மகாரிஷிகளே! ஸ்ரீராமச்சந்திரர் வானராதிகளுடன்புறப்பட்டு தெர்ப்பசயனத்தில் சயனஞ் செய்து முன்சொல்லியிரு

க்கிறபடி நளன் வானராதிகளால் சேதுபந்தனஞ் செய்து சுவேதகிரி
போய்ச் சேனைகளிறங்கி யிருந்து கொண்டு இலங்கைக்கதிபதியாகிய
ராவணேஸ்வரன் முதலாகிய ராட்சதசைனியங்களுட னெதிர்த்து
யுத்தகளத்தில் ராவணேஸ்வரன் முதலாகிய சகலமான சைனியங்க
ளையுஞ் சங்காரஞ்செய்து சரணாகதியென்று வந்தடைந்த விபீஷண
ருக்கு இலங்கா புரிப் பட்டணத்தைப் பட்டாபிஷேகஞ் சூட்டிவிட்டு
அப்பால் சீதா தேவியையுங் கூட்டிக் கொண்டு புஷ்பக விமானத்தில்
அநுமார் முதலான வானர வீரர்களுடன் அயோத்திக்கு வரும்
போது கந்தமாதன கிரிச்சாரலில் வந்திறங்கி தீர்த்தங்களுக்கெல்லாம்
மேலாகிய தனுக்கோடி தீர்த்தத்தை யுண்டுபண்ணி சகலபடைகளை
யுமழைத்துக் கொண்டு புஷ்பகவிமானத்தில் வரும்போது இராவண
னுடைய பிரமஹத்தி பிடித்து புஷ்பகவிமானத்தை மறித்து ஸ்ரீரா
மரைச் சுற்றிக் கொண்டுவந்தது. அதுகாரணத்தைக்கூட வந்தவிபீஷ
ணரறிந்து அந்தத் தோஷம் நீங்கச் சிவபூசை பண்ண வேணுமென்று
கந்தமாதனகிரிச்சாரலில் சேதுக் கரையில் கொண்டு வந்து புஷ்பகவி
மானத்தை நிறுத்த அந்தச் சமயத்தில் அகஸ்தியரும் மகாரிஷிகளு
ம் மற்றுமுள்ள பெரியோர்களும் இராவண சங்காரஞ் செய்து தங்க
ளுடைய இடுக்கண்தீர்த்த ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியைவந்து காணவே
ண்டுமென்று ஆனந்த சந்தோஷங்களுடனே சிஷர்களையும் பத்தினி
களையுங் கூட்டிக்கொண்டு கூட்டங் கூட்டமாகப் புறப்பட்டு ஸ்ரீராம
ரை வந்து கண்டு ஆசீர்வாதஞ் செய்து அநேக தோத்திரங்கள் செ
ய்ய ஸ்ரீராமச்சந்திரரும் ஆனந்த சந்தோஷத்துட னிருந்தார்.

அப்போது மகாரிஷிகளைப்பார்த்து இலங்கைக்கிராஜனாகிய இ
ராவணேஸ்வரனைக் கொன்ற தோஷந்தீர ஒரு பரிகாரஞ் சொல்லவே
ணுமென்று கேட்க. அப்போது முனீஸ்வரர்கள் எல்லோரும் கேட்
டு ஆலோசனைபண்ணிச் சொல்லுவார்கள். வாரும் இராமச்சந்திர மூ
ர்த்தியே! தேவரீருக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. எங்களைக் கேட்
டதனால் நாங்கள் தெரிந்தமாத்திரம் சொல்லுகிறோம். கேளுமென்று
ஸ்ரீராமச்சந்திரமூர்த்திக்குச் சொல்லுகிறார்கள். பூலோகத்தில் வந்து
அவதரித்து ராசாங்கத்துக்குட்பட்டிருப்பதால் க்ஷத்திரிய தருமப்

படி தேவரீரைப் பிடித்திருக்கிற பிரமஹத்தி தோஷம் போகவே ணுமானால் இந்தக் கந்தமா தனகிரியில் சிவ பூசை பண்ணினால் பிர மகத்திதோஷம் நிவர்த்தியாகி விடும். மோட்சங்களையும் கொடுக்கும். இதல்லாமல் கந்தமாதனத்தில் ஒரு தடவை சிவ பூசை பண்ணினால் காசி க்ஷேத்திரத்தில் அநேக கோடி இலிங்கப் பிரதிஷ்டை செய்த பலன் தேவரீராலே பூசிக்கப்பட்ட இந்த இராமலிங்கத்தினால் கிடை க்கும். ஆனபடியினால் அதிசாக்கிரதையோடுஞ் சிவப்பிரதிஷ்டைக் காரம்பஞ் செய்யவேணுமென்று சொன்னார்கள். அந்தவார்த்தையை ஸ்ரீராமர் கேட்டு மனமகிழ்ச்சியுடன் சொல்லுவார். வாருங்கள் மகாரி ஷிகளே! அப்படியே செய்கிறேன். அந்தப்பிரதிஷ்டைப்பலன் நீடூழி காலம் விளங்கும்படி பொருந்திய நாள் பார்த்துச் சொல்லுங்களெ ன்று கேட்க. அகஸ்தியர் முதலான சகல ரிஷீஸ்வரர்களுங்கூடி சா ஸ்திரங்களை ஆராய்ந்து ஆனிமாதம். சுக்கிலபட்சம், புதவாரம், அஸ் தநட்சத்திரம், தசமிதிதி,ரிஷப லக்கினங் கூடிய சுபதினத்தில் உஷத் காலத்தில் சிவப்பிரதிஷ்டை செய்ய தேவரீருக்குப் பொருந்தி யிருக் கிறதென்று சொன்னார்கள். அதைக் கேட்டு உடனே ஸ்ரீராமச்சந்தி ரருஞ் சந்தோஷத்தை யடைந்து கந்தமாதனகிரியி லிருந்துகொண்டு. அநுமானை யழைத்துச் சொல்லுவார்: அப்பா அநுமானே! நாளைய தினம் உஷத்காலபூசைக்குச் சிவலிங்கங் கொண்டுவரவேணும்.ஆகை யால் அதிசாக்கிரதையோடு பூலோக கைலாசமாகிய காசி க்ஷேத்திர ம்போய் சிவலிங்கங் கொண்டுவர வேணுமென்று அநுப்பிவிட்டுச் சிவப்பிரதிஷ்டைக்காக வேண்டிய சாமக்கிரியைகளைத் தாழ்வில்லா மற் சேகரித்திருந்தார்.

இப்பால் அநுமானானவர் ஸ்ரீராமச்சந்திர மூர்த்தியிடம் விடை பெற்றுக் கொண்டு கந்தமாதனத்திலிருந்து விஸ்வரூபங் கொண்டு ஆகாயமார்க்கத்தி லெழும்பி காசிமகா க்ஷேத்திரத்தைக்கண்டு கங்கா நதியில் ஸ்நானம் பண்ணி நிருவிகற்ப நிஷ்டை கூடியிருந்து ஈஸ்வரப் பிரசாதம் பெற்று லிங்கங் கொண்டுவரு முன்னதாக ரிஷீஸ்வரர்கள் முகூர்த்தம் வைத்த நாழிகைகளாச்சுதென்று ரிஷிகளெல்லாஞ் சொ ல்ல, ஸ்ரீராமச்சந்திரரும் அநுமார் இன்னமும் வரவில்லை யென்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தார், அந்தச்சமயத்தில்அகஸ்தியர், கௌ தமர், பராசரர், வியாசர், சுகர் முதலான முனிவர்களும் ஸ்ரீராமச்சந்

திரிடத்தில் அனுமார் இதுவரையில் வரவில்லை. முகூர்த்த வேளை தப்பிவிடும் ஆகையினால் மகா லட்சுமியாகிய சீதாதேவியுடைய இரு கரங்களினால் மணலென்று சொல்லுகிற பூமியை உருத்திப் பிடித்துப் பவளநிறம் பொருந்திய மகாலிங்க சொருபம் வெகுரமணீகரமாய் தெய்வீகமாய் கர்ப்பூரதீபம்போல் பிரகாசிக்கிறது மகாலிங்கம் ஆகச்சே அந்த இலிங்கத்தை வைத்துப் பூசிக்கலாமென்று சகல ரிஷிகளுஞ்சொல்ல ஸ்ரீராமச்சந்திரரும் கேட்டு ஆனந்தசந்தோஷமாக எல்லாம் பிரமமயமென்று அதிசாக்கிரதை யோடுஞ் சீதா சமேதராய் இலட்சுமணர் முதலானவர்களோடும் ஸ்நானஞ் செய்து கேம நிஷ்டைகள் முடித்து விபூதி ருத்திராட்சங்களணிந்து சிவபூசைக்குண்டான சாமான்களும் புஷ்பங்களும் பத்திரங்களும் தருவித்துக்கொண்டு சொர்ணபீடத்தில் சீதா பிராட்டியால் பாணித்த மகாலிங்கத்தை வைத்து தவவேடம் பூண்டு புலித்தோலாசனத்திலிருந்து அறுபதினாயிரங்கோடி தீர்த்தங்களை வரவழைத்து மந்திர தியானங்களுடன் அர்க்கியஞ் சமர்ப்பித்து ஸ்ரீராமச்சந்திர மூர்த்தி வடதிசை முகமாயிருந்து பூசை ஸ்தானத்தைத் திக்குபந்தனஞ் செய்து மங்கள வாத்தியத்துடன் வெண்தாமரைப் புஷ்பம் போலேயிருக்கிற இருதய ஆசனத்திலே சோதிமயமாயிருக்கிற இலங்கத்தில் துவாதசாந்தத்திலிருக்கிற சிவனை ஆவாகனம் பண்ணி சகல மந்திரதந்திர தியானங்களுடன் அபிஷேக நெய்வேதனஞ் சோடச உபசார பூசைகளும் பகிர்முகமாகவும் மானத பூசையாகப் பண்ணினவராய் மந்திரங்களினால் தாழ்ந்திறைஞ்சித் திக்குபந்தனம் அவகுண்டனந் தேனுமுத்திரை மகாமுத்திரையுங் கொடுத்து பூசாஸ்தானத்தைச் சுத்தி செய்து அர்க்கிய பாத்தியங்கள் முன்னால் சொல்லுகின்ற கோடிதீர்த்த சலத்தை மந்திரத்தினால் தியானித்து சுத்தி செய்து தன்னையும் புரோட்சித்துக் கொண்டு பூசாதிரவியங்களையும் புரோட்சித்து அப்பால் சீதா லட்சுமிகையினால் நேமிக்கப்பட்ட சிவலிங்கத்துக்கு அஷ்டபுட்பஞ் சாத்தி சுத்தஜலமபிஷேகம்பண்ணி எண்ணெய்க்காப்பு மஞ்சட்காப்பு நெல்லிக்காப்பு பஞ்சாமிர்தம் பஞ்சகௌவியம் பசுநெய் இளநீர் வில்வக்குளம்புகள் கர்ப்பூரம் பால் தயிர் தேன் சர்க்கரை கருப்பஞ்சாறு வாழைப்பழம் மாம்பழம் பலாப்பழ முதலான பழவர்க்கங்கள் இவைகளால் அபிஷேகஞ்செய்து மந்திரதியானஞ்செய்து கோடிதீர்த்தமும்

அபிஷேகம்பண்ணி அஷ்டபுட்பஞ்சாத்தி தூபதீபமும் அர்க்கியமு ங்கொடுத்து நவரத்தினகஜிதமுள்ள சொர்ணபீடத்தில்உயர்ந்த பரி வட்ட பீதாம்பரங்கள்சாத்தி சந்தன களபகஸ்தூரியுமணிந்து அறு கு, கொன்றை, வில்வமுதலான சகல புட்பங்களுஞ்சாத்தி இப்பால் மகாகணபதியைத் தியானித்துப் பிரார்த்தித்துக்கொண்டு பஞ்சப்பிர மங்களும் இருதயமுதலான அங்கங்களுஞ் சிவனுடனேகூடி இருக் கிறவர்களாகப் பாவித்து தூபதீபமுதலான சோடசஉபசாரங்களும் செய்து ஆசமன அர்க்கியங்கொடுத்து திவ்யான்னங்களும் சித்திரா ன்னங்களும் பால் பழம் சர்க்கரை பலகாரங்களும் நெய்வேத்தியம் வைத்து நானுவிதமான கனிவர்க்கங்களும் வாசனைபொருந்திய சல முதலானவைகளும் படைத்து நிரீட்சணுதி சுத்திபண்ணி அர்க்கிய சலத்தினுல் புரோட்சித்து மந்திரத்தினுல் அபிமந்திரித்து கௌரிகை யினுல் நிவேதித்த பாவனைசெய்து சுவாமியுடைய காங்களைத்துடை த்து தாம்பூலமுதலானவைகள் திவ்வியகரங்களால் நிவேதனஞ்செய்து சோடச உபசாரஞ்களும்செய்து அஞ்சலிபுட்பஞ்சாத்தி கர்ப்பூரதீ பங்கொடுத்து அனந்தாதிகளால் தோத்திரஞ்செய்து மூலத்தினுல் புட்பஞ்சாத்திஇறைஞ்சி மகாமுத்திரை பஞ்சமுக முத்திரையுங்கொ டுத்து ஜெபமாலையை நீரீச்சணுதிசுத்திசெய்து அபிமந்திரித்துஇடது கையினுல் புட்பங்கள்வைத்துக்கொண்டு ஜெபமாலையினுல் நூற்றெ ட்டு அர்ச்சனைசெய்து மந்திரவிதி பூர்வகமாய்ச்சாற்றி இருகரங்களும் மந்திரத்தினுலே பத்துருச்செபித்து சுவாமிக்கு அக்கினிதிக்கில் சடு த்தாசனம்பூசித்து அதில் சிவகிருபை ஆசனத்தில் ஆவாகனுதி ஜெ பாந்தமாகப்பூசித்து தோத்திரஞ்செய்து பின்பு சுவாமிக்கு மேற்பு றத்தில் யோகபீடம் வித்தியாபீடம் பூசித்து அர்க்கியங்கொடுத்து சுவாமிக்குப் புட்பஞ்சாத்தி நாமகரணம் இராமநாதனென்று அநேக வேதமந்திர சுருதிவாக்கியப் பிரமாணங்களினுல் ஸ்தோத்திரஞ்செ ய்து சீதாதேவிசமேதராய் இலட்சுமணருடனே எழுந்திருந்துசக லதேவரிஷிகளுந் தபோதனுதிகளும் புடைசூழ்ந்துவர ஸ்ரீராமச்சந் திரமூர்த்தி முப்பிரதட்சணம்வந்து சாஷ்டாங்க அஷ்டாங்க பஞ்சா ங்கத்துடன் நமஸ்காரஞ்செய்து எழுந்திருந்து சிரசின்மேல்இருகை கூட்பி ஆனந்தக்கூத்தாடி தேகம் மயிர்க்கூச்செரிய புளகாங்கிதராக கண்ணீர்ததும்பத் தோத்திரஞ்செய்து அடிக்கடி இருகரங்களைக்கொ

ட்டி யாதொன்றுந்தோன்றாமல் எங்கும் சுயம்பிரகாசமாய் மகாஆனே
ந்தங்களுடன் அன்புகள்பெருகி நிற்கிறபோது அந்த இராமலிங்கத்
திலிருந்து கோடிசூரியப்பிரகாசம்போல் தேஜசுடன் மான் மழு
சதுர்ப்புஜம் காளகண்ட திரிநேத்திர சந்திர கங்காதர சடாதாரி
யாய் மகா கேயூர குண்டல மணிமகுடதாரியாய் ஆடையாபரண பூ
ஷணலங்கிர்த அர்த்தநாரிபாகராய் அரவாபரண கங்கண விபூதி
ருத்ராட்சதாரியாய் புலியாடையும் மத்தகஜபோர்வையும் ரிஷபவா
கனமும் தோற்றும்படி பார்வதிசமேதராக முப்பத்துமுக்கோடிதே
வர்களும் நாற்பத்தெண்ணாயிரம் முனிவர்களும், கின்னரர், கிம்புரு
டர், கருடகாந்தருவர், சித்தவித்தியாதரர், கணநாதர், தும்புரு நார
தர், அஷ்டவசுக்கள் முதலாகிய சிவபக்தர்களும் புடைசூழ பிரத்தி
யட்சமா யெழுந்தருளி ஸ்ரீராமச்சந்திரரைப்பார்த்து வாரும் ஸ்ரீராம
ச்சந்திராவென்றார். உடனே ஸ்ரீமந் நாராயணனைக் கண்ட பனி யெப்
படி விலகுமோ அப்படிப்போலவும் வெப்புக்காலத்திலே வீசுகின்ற
சண்டமாருதக் காற்றுப்போலவும் பிர்மகத்தி நிவர்த்தியாகிவிட்
டது.

இப்பால் கைலாசபதியாகிய பரமேஸ்வரனும் ஸ்ரீராமச்சந்திர
ரைப்பார்த்துச் சொல்லுவார்: வாராய் ஸ்ரீராமச்சந்திரா! சேது தனுக்
கோடியில் சங்கற்பவிதிப்படி ஸ்நானஞ்செய்து பின்பு இந்தக்கந்தமா
தனத்தில் சாஸ்திரயுக்தமாகப் பூசைமுதலான செபங்கள்செய்து நம்
மை வரவழைத்தபடியால் உம்முடைய துன்பமாகிய பாவங்களெல்
லாம் நீங்கிவிட்டது. அதுபோல் பூலோகத்தில் பக்தி வைராக்யமா
ய்ச் சேது தனுக்கோடிமுதலிய சகலமான தீர்த்தங்களிலும் சங்கற்ப
விதிப்படி ஸ்நானஞ்செய்து வணங்கி ஒழுக்கத்துடன் சாஸ்திரயுக்
தமாகப் பூசைபண்ணினபேர்களுக்கு சகலபாவதுன்பங்களும் விமோ
சனமாகி மோட்சசாம்பிராச்சிய கைவல்லியமாம். மேலான சாயுட்சி
யபதங்களைப்பெற்று பிர்மானந்தத்தை யனுபவிக்கக் கடவர்களென்
று வரங்கொடுத்துப் பின்னுஞ்சொல்லுவார்: உம்மைப்போல் ஆர் இந்
தக் கந்தமாதனத்தில் நம்மைப் பூசிக்கிறார்களோ அவர்களநேக
வரப்பிரசாதங்களுடன் இஷ்டகாமிய மோட்சகாமியங்களும் பிர்மா
னந்தங்களு முண்டாகி சுகத்தையடைவார்களென்று மறுபடியும் வர
ங்கொடுத்து பின்பு இராமலிங்கத்தில்தானே அந்தத் தேஜசுடனே
மறைந்து ஸ்ரீராமநாதர் எழுந்தருளியிருந்தார்.

இப்படி ஸ்ரீராமநாதர் காட்சிகொடுத்து வரப்பிரசாதமானவுடன் அந்தவார்த்தையைக்கேட்ட சகலதேவாதிகளும் ரிஷீஸ்பார்களும் முனிவர்களுந் தபசிகளும் அரம்பாஸ்திரீகளும் விபீஷணன் சுக்கிரீபன் வானராதி முதலானபேர்களும் அவரவர்கள் தனித்தனியே மிர்த்திகைகளைப் பாணித்து வேதாகமப் பிரகாரம் தப்பாமல் சிவபூஜைகள் செய்துகொண்டும் அநேக தோத்திரங்கள் புரிந்துகொண்டுமிருந்தார்கள்.

கேட்டீர்களோ மகாரிஷிகளே! இப்படியிருக்கிற சமயத்தில் பூலோக கைலாசமாகிய காசிக்ஷேத்திரத்திற்குச் சென்று லிங்கங்கொண்டுவரப்போன அனுமாரும் ஈஸ்வரப்பிரசாதமாய் இரண்டுலிங்கம் வாங்கிக்கொண்டு மகாஜாக்கிரதையோடே விஸ்வரூபம்கொண்டு கந்தமாதனத்திலேவந்துகுதித்தார். இப்படிக் குதித்த அனுமார் ஸ்ரீராமச்சந்திரரையுஞ் சீதாதேவி இலட்சுமணரையும் சுக்ரீபனையும்நமஸ்காரஞ்செய்து எழுந்திருந்து பார்க்கிறபோது சிவபூஜைநடந்து தோத்திரஞ்செய்கிறதை அனுமார்கண்டு உடனே மகாவிசனங்களும் ஆங்காரங்களும் பெருமூச்சுமுண்டாகி நான் எதற்காக அவ்வளவுதூரம் போய் லிங்கங்கொண்டுவந்தேன்! வந்தும் பிரயோசனமில்லாமலிருக்கின்றது என்று தாரைதாரையாய்க் கண்ணீரோடச் சொல்லுவார். வாருமையா சுவாமி! தேவரீருக்கு எப்போது இந்தமனதுண்டாயிற்றோ? நான்தான் இந்தஜன்மத்தில் ராகாதிகோபம் இடும்பைகளுடனே கூடிக்கொண்டு ஊண் தின்கிற பொருட்டாய் இன்பதுன்பங்கள் தெரியாமல் மற்கடப்புத்தியினால் நடந்துகொண்டு தேபுராக்ஷதர் மனிதர்களால் இம்சைகளடைந்து பிரயாசைப் படும்படியாய் என்னுடைய மாதாபிதா என்னைப்பெற்று வளர்த்து பரிபாலனஞ் செய்தார்கள், ஆகிலும் அப்படிக்கொத்த துன்பத்துக்கிடமாய்க் கரைகாணாமல் அலைந்துதிரிந்த என்னைத்தேவரீர் ரக்ஷிக்கவேணுமென்று நான் படுகின்ற சிரமங்களை யெல்லாந்தீர்த்து வெற்றி அடையும் படிக்குக் கிருபைசெய்து அதினால் அநேகங்கீர்த்திகளைப்பெற்று சுத்தவீரத்துடன்தோடும் யாவரும் கொண்டாடும்படி என்னைப்பெற்ற மாதாவைப்போல்தேவரீர் ஆதரித்துக்கொண்டு வந்தீரே? இப்போது அடியேனென்னகுற்றம் பண்ணினேன்?

தேவரீர் சீதாதேவியின் பொருட்டாக எவ்வளவு பிரயாசங்களை அடைந்தீர்! அதுமூலமாகச் சுக்ரீவன் விபீஷணன் முதலானவான

ராதிகள்தான் சுகமாய்ப்பட்டாபிஷேகஞ் செய்துகொண்டு கவலைனுக் குமுதலானவை நீங்கிச் சுகமாய் வாழ்ந்திருக்க வேண்டுமென்றும் தேவரீர் பின்னோடே ஏவல்பணிவிடை கேட்டுக்கொண்டு வந்திருக்கிறார்கள். இப்பால் அடியேனுந் தேவரீருக்கு ஏவல்பணிவிடை செய்து வந்தேன்.

ஆனால் சகலதேவர்களும் முனீஸ்வரர்களும் வானராதிகளுஞ் சுத்தவீரர்களுங் கோடானுகோடி பேர்களையெல்லாம் விட்டுப்போட்டு என்னைப்போய்ச் சிவலிங்கங் கொண்டுவரச்சொன்னது இதற்குத்தானோ? இப்படி அவர்களெல்லாம் பார்த்துத்தூஷணிக்க அவமானம் பண்ணவேணுமென்று திருவுளத்தில் ஆலோசித்துக்கொண்டுஅனுப்பினீர். இதற்குத்தானோ நான் அநேக பிரயாசைகளடைந்து காசிக்குப்போய்ச் சருகோடேசருகாய்த் தேகத்தை உலர்த்தித்தவநிஷ்டை செய்து கைலாசபதியிடத்தில் வரப்பிரசாதம்பெற்றுத் தேவரீர்பூசைக்குச் சிவலிங்கங் கொண்டுவந்தேன்? அதற்குள்ளாக ஏதுகாரணத்தினால் மணலைக்குவித்துப் பூசைமுடித்துப் போட்டீர்கள்.அதைக்குறித்து யோசித்துப் பேசவேண்டியதென்ன இருக்கின்றது? ஆனால், முன் செய்த தபோபலத்தினால் இப்போது சோடச கலைபொருந்திய மகாலிங்கத்தைவைத்துப் பூசைபண்ணும்படியான நன்மையும் புண்ணியங்களும் பெற்றிருக்கவேண்டும். அதுபோலவே புண்ணியஞ் செய்யாத பேர்களுக்குக் கொடுத்துவைக்காதென்று வேதவாக்கியங்கள் முறையிடுகின்றன. என்னளவில் நிசமாய்ப்பலித்ததென்று மகா விசனத்தை யடைந்தவராய்த் தேவரீர் இப்படிநினைத்துக்கைதவற விட்டபோதே இனிமேலெனக்குக் கெதியென்ன இருக்கின்றது?லோகத்தில் அவரவர்கள்செய்த பாவபுண்ணியங்களை அவரவர்கள் அனுபவிப்பதுபோல் நான்தான் அனுபவிக்கவேணும். இனிமேல் தேவரீருக்கு ஊழியஞ்செய்து சிறப்பிக்காத இந்தச்சடலத்தை இனிமேல்வைத்திருப்பதில் யாருக்கென்ன பிரயோசனம்? ஆனதால் உயிரைமாய்த்துக்கொண்டாலொழிய என்னுடைய கவலையுந் துன்பமுந் தீராதென்று அனுமாரானவர் அநேகவிதமாய்ப் பிரலாபித்து என்னுடைய பிராணநாதமாகிய சகல ஜனரட்சகா! தீனவியாபரா! தபோவைராக்கிய சுத்தவீரா! ஆபத்பாந்தவா! அனாதரட்சகாவென்று ஸ்ரீராமச்சந்திரனுடைய பாதாரவிந்தத்தில் அடித்து மோதிவிழுந்து அலறி கோவென்ற சத்தத்துடன் அழுது மூர்ச்சையாகிக் கிடக்கிற அனுமாரைப் பார்த்து

புன்சிரிப்புக்கொண்டு பரிபூரணமாய்க் கிருபைகூர்ந்து ஸ்ரீராமச்சந்திர
மூர்த்தி வாரியெடுத்துக் கட்டியணைத்து மேலேபட்டிருக்கிற தூசிக
ள் கண்ணீர்களையுந் துடைத்து முதுகைத் தடவிக்கொடுத்துச்
சொல்லுவார்: வாராய் அனுமானே! நீயேன்விசாரப்படுகிறாய்?
என்னுடைய தத்துவக் கியானமாகிய சரியைகிரியை யோகமான
சுத்தசைதன்யப் பிரகாசமான ஒளியே யெங்கும் நிறைந்திருக்கின்
றது. அதின்மகிமை உனக்குத்தெரியாதோ? இதுவல்லாமல் நான்
முதலாகிய சகல உயிர்களுடைய நிலைகளையுமறிவாய். அதுவும் யான
றியேன். அது எப்படியென்றால், சகலவாத்மாக்களாகிய ஜீவன்களெ
ல்லாம் ஒன்றே அல்லாமல் இரண்டல்ல. அப்படியூகித்துப் பார்க்கிற
போது நீவேறு நான்வேறாகமாட்டாதே. ஆனால் பிறக்கிறதும் இறக்
கிறதும் முன்செய்த கர்மானுபவப்படி நடக்கும். அந்தவினைக்கீடாய்ப்
பாவபுண்ணியம் நன்மைதீமை நரகசொர்க்கங்களுங் கிடைக்கும். இவ்
வளவு காரியங்களும் நிறைந்திருக்கும் நானாவித ரூபமான பேதாபே
தங்களும் மனக்கட்டேதவிர வேறில்லை. நீயென்றும், நானென்றும்
பேதமுண்டா? நான்செய்தது நீசெய்ததல்லவா? நீசெய்த இன்பதுன்
பம் நான்செய்ததல்லவா? எங்குஞ் சுயம்பிரகாசமாய்ப் பிரமானந்தக்
காமியாய் முன்பின்னில்லாமல் ஆண்பெண்ணிரண்டு. அதில் . அவியி
ல்லாமல் ஆதியந்தம் ஆதாரம் நிராதாரஞ் சுகந்துக்கமில்லாமல் விள
ங்கிக்கொண்டிருப்பதுவே ஆத்மசொரூபம். அப்படிக்கொத்த ஆத்ம
சொரூபத்தை நீதானவனாய்ப்பார்த்து வணங்காமல் இப்படிக்கொத்த
அகங்காரம் மனதிலே எப்போது உண்டாயிற்றோ? அதுவிரோதமல்ல
வா? வீணான அகங்காரத்தை மேலிட்டால் பாவபுண்ணிய கிர்த்தியங்
கள் தோற்றாமல் ஆத்மாவுக்குக் கெடுதலுண்டாகும். ஆனதால் இந்த
அகங்காரத்தை நீக்கி தர்மசிந்தனை மனதில்வைத்து இந்திரிய நிக்
கிரகம் போராண்மைகளையுந் தவிர்த்துவிட்டு நன்றாய் யோசித்துப்
பார்த்தால் சகல தேவாதிகளுந் துதிசெய்கின்ற கர்த்தனுடையபாதா
ரவிந்தத்தில் மனஸ்கரித்து நமஸ்காரஞ்செய்து வணங்கித் தோத்திர
ஞ்செய்து அதுவே உள்ளும்புறம்பாய் ஒன்றாகிவந்த அறிவேசொரூப
மே நிச்சயமானவஸ்துவேயொழிய மற்றப் பிரபஞ்சமெல்லாஞ் சத்
தப் பொய்யாகும். அப்போது நல்லது பொல்லாதது இரண்டும் மயக்
கப்படும்.

அதினாலே கோடானுகோடி ஜென்மங்கள் தேவமானிடமிருக
பட்சி தாவரங்களாய்ப் பிறக்கவேணும். இந்தவகை தெரியாமல் சகல

மான பேர்களுங்கெட்டுப்போய் நன்மார்க்கங்களை அநுசரிக்காமல் மானிட தேகத்தைப்பெற்ற நமக்கு என்னபேறு மிருக்கிறதென்று அநுமாரானவருக்குச் சொல்லிப் பின்னும் ஸ்ரீராமசந்திரர் சொல்லு கிறார். வாராய் அநுமானே! இந்த இன்பதுன்பஞ் சுகதுக்கம் நீநா னென்று ஆரெண்ணக்கூடும்? அபிமானத்தினாலே மானத்தைக் காப்பா ற்றுகின்ற பேர்களுக்கே பிறப்பிறப்பில்லை. இந்தப்பிறப்பில் இடும் புகள் போய்விட்டதானால் இன்பதுன்பங்கள் போய்விடும். இப்படிச் சகல உயிர்களும் பிறந்துபிறந்து அழியும். உன்னைப்போல் விவேகமு ள்ள பேர்கள் துஷ்டசாவகாசமான இடும்புகளை ஒருபொருளென்றெ ண்ணுவார்களா? அது எப்படியென்றால், ஒருகண்ணில்லாத அந்தக ன் பாதைமார்க்கம் போம்பொழுது தெரியாமல் அப்பாதையிலிருக் கின்ற மடுவாகிய குழியில்விழுந்தால் மறுபடியும் அந்தப்பாதை வரக் கூடாதே! அப்படிவந்தால் மறுபடியும் அந்தமடுவான குழியில்தானே விழவேணும்? வேறு நல்மார்க்கத்துக் கிடமுண்டா? அப்படிப்போல்தா ன் கடவுளனுக்கிரக முண்டாயிருக்கும் வரை உண்டாகிற இன்பதுன் பகஷ்டங்கள்நீங்கி சுகம் அநுபவிக்கிறது. அதற்குப்பிரமாணம் எப்ப டியென்றால், வேதாந்தசாஸ்திரவாக்கியங்களில் போதிக்கின்ற ஞான த்தைத்தெளிந்து பார்த்தால் மூன்று வாக்கியத்துள்ளே சகலமுந்தோ ற்றப்படுமாகையால் அப்படிக்கொத்த வாக்கியார்த்தமும் அநுபவங் களும் பார்ப்பது தமிழ்ச்சாகரமாகிய வேதஞானக்கடலில் மூழ்கிக் கரையேறி இன்பதுன்பம் நீங்கி பரமசுகத்தை அநுபவிக்கின்ற ஆ சாரியருடைய சந்நிதானத்தில் அவர் பாததாமரைக் கன்பனாய்ப் பணிவிடைசெய்து அவருடைய கிருபாகடாட்ச வீட்சண்ணியத்தி னால் அபிமானம் அக்ஞானம் விவேகசூனியம் முதலானவை நீ கிரகி த்துதுவேஷாதிகளையும்போக்கினால் நீயேநானாய்நானேநீயாய்த்தோன் றும். அப்படித்தோன்றினால் காலதேச வர்த்தமானமெல்லாம் ஒன் றாய் அப்பிரகாசமாய் வேறுபாடில்லாமல் எங்கும் தோற்றப்படும் அப்படிக்கில்லாமல் நீவீணான அகங்காரத்தினால் தன்னைமறந்து இப்ப டித் துக்கத்தையடைகிறாய். நீயார் நானார்? மங்களீவ ஜெந்துக்களார்? இரண்டாகப் பாவித்ததினால் தான் பேதப்பட்டது. ஒன்றாக நினைந் துப் பார்த்தால் நீசெய்தாய் நான்செய்தேன் என்ற வழக்குக்கிட

மிர்து. இவையெல்லாம் புராணரீதியினுல் உண்டாக்கப்பட்டன.
மனதினுடைய வேற்றுமையேயல்லாது வேறில்லை. அப்படியிருப்
பதால் நான்மனதார உனக்கு வஞ்சகம் நினைக்கவில்லை. உன்னைக்குற்
றமாய் எண்ணவில்லை. ஆனதால் சிவலிங்கப் பிரதிஷ்டைபண்ணிப் பூ
சைமுடிப்பதற்கு வைத்திருந்த முகூர்த்தம் கடந்துபோகிறதாக இரு
ந்ததினுல் அந்தச் சமயத்துக்கு நீ வராததினுல் பெரியோர்களாகிய
ரிஷீஸ்பரர்கள் சொற்படி ஜானகியினுல் பாவித்தமிர்த்திகை லிங்கத்
தைத் தானே வைத்து நாம் பூசைபண்ணினேம். இது உண்மையான
காரியம். நான் உன்னை இலேசாக நினைத்துத் தள்ளிப்போட்டு நான்
பூசைபண்ணினதாய்க் கோபித்துக் கொண்டு விசனப்படுகிறது அழக
ல்ல. கோபத்தைவிட்டுவிட்டு நீ காசியிலிருந்து கொண்டுவந்த இலிங்
கத்தை உன்னுடைய பேராலே பிரதிஷ்டைசெய்து வணங்கு. நீ அ
நேகம் ராக்ஷதர்களைக் கொன்றிருக்கிற தோஷங்களெல்லாம் உன்னை
விட்டு நீங்கிப்போம். ஆனபடியினுல் சாம்பசிவமூர்த்தி கிருபைபெற
றுக்கொண்டுவந்த இலிங்கத்தைப் பிரதிஷ்டைசெய்து அர்ச்சனைசெய்
வாயானுல் நீ செய்யப்பட்ட அநுமலிங்கத்தைப் பூலோகத்தில் சகல
மான ஜனங்களும் முன்னே வணங்கி அப்பால் நம்மிடபேரால் பிரதி
ஷ்டைசெய்த லிங்கத்தைப் பின்னுல் வணங்கினுர்களேயானுல் அவர்
களுக்குச் சகலவினைப் போகங்களும் பேய்பூத வேதாளங்களும் வில
கிப்போய் இஷ்டகாமியங்களும் மோக்ஷானந்தங்களும்பெற்று தனக
னவஸ்து வாகனுதிகளுடன் சகலசம்பத்தும் பெற்றுச் சுகமாய்வாழ்
வார்கள். இப்படிக்கொத்த அநுமலிங்கத்தை இராமலிங்கத்துடன் மூ
ன்றுய்த் தரிசெய்துவருகின்ற புண்ணியசாலிகளுக்கு யாகங்கள், எ
க்கியங்கள், தானதருமங்கள், ஸ்தலதெரிசனங்கள் இவையெல்லாம்
வேண்டியதில்லை. இதுவல்லாமல் இந்தக் கந்தமாதனகிரியில் நான்
சீதை லட்சுமணன் விபீஷணன் முதலாகியபேர் பூசைசெய்திருக்கிற
தில் அந்தச்சிவலிங்கத்தில் பரமேஸ்வரன் நிறைந்து விளங்குவதினும்
நீ பூசைசெய்கின்ற சிவலிங்கத்தில் பிரதானமாய் விளங்கக் கடவதென்
றும் சந்நிதியாயிருக்கக்கடவதென்றும் வரப்பிரசாதங் கொடுத்து
வாராய் அநுமானே! என்றறிவித்துப் பின்னுஞ்சொல்லுகிறுர். உன்
னுடைய துன்பங்களெல்லாம் தீர்ந்துபோய்விடும்படியாய்க் காசியிலி
ருந்து கொண்ட சிவலிங்கத்தைப் பிரதிஷ்டைசெய்து வணங்குவா

யானுல் உன்னால் பூசிக்கப்பட்டிராநின்ற அநுமேசனையும் நம்மால் பூசிக்கப்பட்டிராநின்ற இராமேசனையும் ஆயிரம்யோசனைக் கப்பாலி ருந்து நினைத்தபேர்களும் அநேக புண்ணியங்கள் உண்டாகியும் அஞ்ஞானபாசங்கள் நீங்கியும் பரமபதத்தை அடைவார்களென்று ஸ்ரீராமர் சொல்லிப் பிரதிஷ்டை செய்யச்சொல்ல அதற்கு அனு மான் சொல்லுகிறார்:

தேவரீர் பூசித்த லிங்கத்தைப் பேர்த்தெறிந்து போட்டுவிட்டு அடியேன் கொண்டு வந்திருக்கும் கயா லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்யவேண்டுமென்று அனுமார் சொல்ல, அப்பொழுது ஸ்ரீராமரா னவர் சொல்லுகிறார். நான் பிரதிஷ்டை செய்திருக்கின்ற சிவலிங்கத் தை இனிமேல் பேதிக்கக்கூடாது. அந்தச் சிவலிங்கம் இருக்கும்படி யான இடங்கள் யாதெனில், பாதாளலோக பரியந்தமும் ஈரேழுபதி னன்கு புவனங்களுந் தட்டுருவும்படி வேருன்றி எங்கும் வியாபித்தி ருக்கும் பரம்பொருள் ஆனபடியால் உன்னால் அசைக்கிறதற்குக்கூ டாது என்று ஸ்ரீராமரானவர் சொல்லிப் பின்னுஞ் சொல்லுகிறதாவ து: முன்னொருகாலத்தில் சிவபெருமான் அக்கினிமலையாய்நின்ற சிவ க்கொழுந்தின் அடிகண்டாலும் மகாமேருமுதலான அஷ்டகுலபர்வ தங்களி னடிகண்டாலும் இந்தச் சிவலிங்கத்தின் அடிகாணமுடியா து. அப்படி உனக்கும் பலமிருந்தால் நான்செய்த சிவப்பிரதிஷ்டை லி ங்கத்தைப் பிடுங்கிவிட்டு நீ கொண்டுவந்திருக்கிற சிவலிங்கத்தைப் பிரதிஷ்டைசெய்யென்று ஸ்ரீராமமூர்த்திசொல்ல,இந்தவார்த்தையைக் கேட்டவுடனே அனுமாரானவர் சந்தோஷத்தையடைந்து இந்தமிர் த்திகையான மண்ணைப் பேர்த்தெரிகிறதா! கடினமென்று தாவிக்குதி போட்டுக் கொண்டுபோய் சகலதேவாதிகளுந் தபோதனர்களாகிய ரிஷீஸ்வரர்களுஞ் சித்தசாரணாதிகளுங் காணும்படியாய் ஓடிப்போய் சீதாதேவி கையினுல் பாணித்த ஸ்ரீராமலிங்கத்தைப் பிடித்து அசை த்தார். அசையவில்லை. மிர்த்திகைக்கு எவ்வளவு பலமென்று பஞ்ச பூதங்களையும் அடக்கி மகா உக்கிரத்துடன் அசைத்தார். அசைய வில்லை. மூச்சடக்கிக் கொண்டு அநேக தடவை மகாவிசைகளோடே பேர்த்து அசைத்தார். அப்படியிருக்கையில் இராமலிங்கம் அணுவள வாவது அசைவு கொடுக்கவில்லை. பின்னும் மகா ஆங்காரங் கொண்டு

வாலைமுறுக்கிப் பல்லை நெறநெறவென்று கடித்து வாலிலே கட்டியிருக்
கிற மணிகளெல்லாங் கணகணவென்று முழங்க சத்தாடம்பரத்து
டன் தலைக்குமேலே ஆகாசவெளியைப் பார்க்க வாலைநீட்டிக்கொ
ண்டு மகாகெருவத்தோடே பிடித்தசைத்தார். அப்படியும் அசைவு
க்கிடமில்லை. பின்னும் அனுமாருக்குத் தோன்றாமல் மரம் போலவும்
மலைகள்போலவும் வெகுவாக எண்ணிக்கொண்டு மண்ணான இந்த
மிர்த்திகை லிங்கத்துக்கு இவ்வளவு பலமாவென்று விஸ்வரூபங்கொ
ண்டு அனுமாரானவர் இரண்டுகரங்களையும் பூமியில் ஊன்றிக்கொண்டு
வாலினால் சிவலிங்கத்தைச் செம்மையாய் இருக்கும் படியாய் இலி
ங்கந்தெரியாமல் இறுக்கிக்கொண்டு ஆகாசத்தில் உண்டான சந்திர
சூரியர்கள் நட்சத்திரங்கள் புண்ணியலோகத்தார் முதலான சகலருங்
கிடுகிடுவென்று திகிலெடுத்து நடுக்கும்படி ஆகாசத்தில் அந்தர லாகு
கொண்டு காலிரண்டையும் உயரத்தூக்கி வெகுசவுரிய புஜபல பராக்
கிரமத்துடன் எழும்பி விசைகொண் டசைக்கும்போது பூமி அந்தர
சொர்க்க மூன்றுலோகங்களும் அஷ்டதிசைகளும் ஈரேழுபதினாலு
புவனங்களும் அண்டபிண்ட சராசரங்களும் அகிலலோகங்களும்
அஷ்டகுல பருவதங்களும் திக்கு, திகாந்தரங்களுஞ் சத்தசமுத்திரங்
களுஞ் சந்திரசூரியர் நட்சத்திரமுதலான சராசரங்களிலுள்ள எறும்பு
கடை முதல் எண்பத்துநான்கு நூறாயிரங்கோடி ஜீவாத்மாக்களும்
அதினுடைய கர்ப்பங்களும் அசையப்பட்டு கணகணவென்றும் நெற
நெறவென்றும் கலகலவென்றும் வெப்புக்காலத் திடிபோல் முழங்
கியும் அல்லோல கல்லோலமாய்ச் சுழன்று அசைந்ததே அல்
லாது ஸ்ரீராமராலே பிரதிஷ்டைசெய்து பூசிக்கப்பட்ட ஸ்ரீராமலிங்
கம் கொஞ்சங்கூட அசையவில்லை. இன்னும் கர்த்தருடைய செயல்
அனுமாருக்குத் தோற்றாமல் பின்னும் விசைகொண்டெழும்பி வாலை
முறுக்கியிறுக்கிக்கெட்டிபண்ணி அசைக்கிறபோது, அனுமாருடைய
வாலானது நைந்து அறுந்து எழும்பினவாக்கில் தலைகுப்புறக்கரணம்
போட்டுக்கொண்டு கூப்பிடுதூரம் ஸ்ரீராமலிங்கத்துக்கு வடபாரிச
த்தில் மகாமேரு கொடுமுடியை இந்தப்படி தன்னுடைய பிதாவாகிய
வாயுபகவான் பேர்த்தெறிந்ததுபோல் தானொரு கொடுமுடிபோல்
அலறிக்கொண்டு பூமியிலே விழுந்தார்.

இப்படிவிழுந்த அனுமாருக்கு வாயினாலேயும் மூக்கினாலேயும்
இரத்தங்கள்சிந்தி எலும்புகள் நொறுங்கித்தலைமண்டைகள் உடைந்து

விழிகள் பிதுங்கி நவத்துவாரங்கள்வழியே குபீர்குபீரென்ற ரத்தங்
கள்கொப்பளிக்க ஆறுகள்போல்ரத்தங்கள் பெருக அனுமார் விழுந்த
அதிர்ச்சியால் பூமியில் பெலத்துவாரம்போலாகப் பள்ளமாய்த்தண்
ணீர்ஊற்றுகையில் பள்ளமாகித் தண்ணீர்பெருக இரத்தமுஞ்சலமும்
ஒன்றோடொன்றாய்ப் பெருகிச்சமுத்திரத்தில் அலைமோதினதெப்படி
யோ அப்படிப்போல அனுமாரானவர் தலைகுப்புற மூர்ச்சையடைந்
தது மல்லாமல் நாக்குவெளியே நீட்டிக்கிடக்க தேவாதி தேவர்களும்
வானராதிகளும் ரிஷிமுனி சித்தாதிகளும் அனுமாருடைய வருத்தங்
களைககண்டு ஆச்சரியமடைந்து அன்புகளையும் ஸ்ரீராமநாதனுடைய
கிருபானந்த மகிமைகளையும் நினைத்து புகழ்ந்து கொண்டாடி நின்ற
வர்களாய் ஸ்ரீராமலிங்கத்தின்பேரில் பாதிவால்சுற்றியிருக்கப்பாதிவா
லறுந்து கூப்பிடும்தூரம் அனுமார் விழுந்துவிட்டதைச் சகலமான
பேர்களும்கண்டு கிடுகிடுவென்று நடுங்கி வேர்த்துப் பிரமித்து ஸ்ரீரா
மர் சீதை இலட்சுமணர் விபீஷணர் வானரவீராதிகள் தேவாதி தே
வர்கள் தவமுனிவர் ரிஷீஸ்வரர்கள் சித்தர்கள் முதலான எல்லோரும்
நின்றது நின்றபடியே கால்கை பதறிக்கொண்டு அனுமாரைப் பார்க்
கிறபோது அவர் கிடக்கிற பரிதாபங்களைக்கண்டு சகிக்கமாட்டாதவர்
களாய் விசனப்படுகிறதைக்கண்ட ஸ்ரீராமச்சந்திரர் தாரைதாரையாய்
க்கண்ணீர்சொரியும்படி பிரகாசித்தும் இலட்சுமணர் வாயிலும் வயிற்
றிலும் அறைந்துகொண்டு துக்கப்படுவதைச் சீதாதேவி கண்டு கோ
வென்று கூக்குரலிட்டுக் கடகடவென்று பூமியிலே விழுந்தழுதாள்.
எழுந்திருந்து தன்னுடைய இரண்டுகைகளினாலேயும் அனுமாருடை
ய அவயவங்களை இரத்தவெள்ளத்திலிறங்கித் தடவியெடுத்தாள்.
அப்படி யெடுக்கிறபோது அனுமாரானவர் நைந்து சருண்டுபோயிருக்
கிறதைக்கண்டு வானராதிகளும் தேவாதி தேவர்களும் தவமுனி
களும் சித்தாதிகளுங்கண்டு ஐயோ! ஐயோவென்று அபயமிட்டுமுகத்
தில்அறைந்து கொண்டு கோவென்றழுதார்கள். ஸ்ரீராமரும் அனுமா
ரைத் தோளோடே சேர்த்தணைத்து இந்த அவதியைப்பார்க்கவா
இருந்தோமென்று அனுமார் தலையைத்தாங்கி மடிமேலே வைத்தார்.
அப்போது தலைகட்டமாக நிற்காமல் குப்புறவிழுகிறதைப் பக்கத்
திலிருந்தசீதாதேவிகண்டு அடித்தும் விழுந்தும்எழுந்து தன்னுடைய

இரண்டு கரங்களினாலேயுந் தலையைத் தாங்கிக்கொள்ள ஸ்ரீராமர் லட்சுமணர் முதலான சகலமான பேர்களுங் கண்களைத் துடைத்தும், இரத்தங்களைத் துடைத்தும் கோவென்றலறி அபயமிட்டுப் புலம்புவார்கள்:

நீ இப்படிப்போயிருக்க நாங்கள் கண்ணாலே பார்க்கவுங் காலம் வந்ததே! விபீஷணனை அடைக்கலங்கொள்ள நீதிசொன்னாயே. மகாவிவேகசாலியான நீ ஒன்றுந்தோற்றாமல் இப்படி அவதிக்குள்ளானாயே! இனியொன்றும் யோசியாமல் என்ஜீவனைப்போக்கடிக்கிறேன். இனிமேல் உன்னைச் சாகக்கொடுத்துப்போட்டு நான் அயோத்திக்குப்போய்ப் பட்டாபிஷேகஞ் செய்து கொண்டு வாழ்ந்திருக்கவும் கூடுமா! அரசாட்சி செய்யவும் வேணுமா! நான் ராவணசங்காரஞ்செய்து பூசையை முடித்து இவ்வளவு வெற்றிகொண்டுவந்தது உன்னாலேயல்லாது மற்றப்போராலேயில்லையே? நானென்ன செய்யப்போகிறேன்! உன்னை நம்பியிருந்தேன். அயோத்தியாபுரிப் பட்டணத்திலே என் தம்பிமாருடன் என்னைச்சேர்த்து வைக்காமல் இரண்டகஞ் செய்து போட்டாயே! அனுமானே யென்று ஸ்ரீராமர் கண்ணீர் ஆறாகவோடப் புலம்பச்சீதாதேவி முதலான பேர்களும் அப்படியே அனுமாருடைய புசபலபாக்கிரமங்களையும் மகிமைகளையும் நினைத்து நினைத்துக் கண்ணீர்கள் ஆறாய்ப்பெருகியோட அழுது புலம்புகிறபோது ஸ்ரீராமச்சந்திரருடைய கண்ணீர்களானது அனுமாருடைய தேகத்திற்போய்பெருகுகிறதினால் மயிர்க்காம்புகளிலெல்லாம் புகுந்து தாபசோப மயக்கங்களெல்லாந் தீர்ந்து கண்களை விழித்துப் பார்த்து உடம்பில் செயலுண்டாகி தேவர்களெல்லாம் பலமுண்டாக்க ஸ்ரீராமச்சந்திரர் சீதாதேவி இலட்சுமணர் முதலான பேர்களுடைய கண்ணீர்களால் ஸ்தானம் பண்ணப்பட்டதினால் கந்தமாதனத்தின் சேதுவில் ஸ்ரீராமநாதனைத் தொட்டுப் பிடுங்கிப் போடவேணுமென்று நினைத்து அபசாரஞ்செய்த பாவம் விமோசனமாகி அஞ்ஞானங்களெல்லாந் தீர்ந்து ஞானோதயமாய்த் தோற்றப்பட்டதினால் ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியையுஞ் சீதாதேவியையும் அநேக தோத்திரங்கள்செய்து வணங்கி சகஸ்திரநாமங்களால் ஸ்ரீராமசந்திரருடைய கருணைப்பிரவாகங்களையுஞ் சொல்லித் தோத்திரஞ்செய்து அடியேன் செய்த அபசாரங்களைப் பொறுத்து இரட்சிக்கவேண்டியதென்று சீதாலட்சுமி சமேத

விழிகள் பிதுங்கி நவத்துவாரங்கள்வழியே குபீர்குபீரென்று ரத்தங்
கள்கொப்பளிக்க ஆறுகள்போல்ரத்தங்கள் பெருக அநுமார் விழுந்த
அதிர்ச்சியால் பூமியில் பெலத்துவாரம்போலாகப் பள்ளமாய்த்தண்
ணீர்ஊற்றுகையில் பள்ளமாகித் தண்ணீர்பெருக இரத்தமுந்ஜலமும்
ஒன்றோடொன்றாய்ப் பெருகிச்சமுத்திரத்தில் அதிவேகமாய்ச்சென்றபடி
யே அப்படிப்போல அநுமாரானவர் நல்லுப்புச் சமுத்திரமடைந்
தது மல்லாமல் காக்குவெளியே நீட்டிக்கிடக்க தேவாதி தேவர்களும்
வானராதிகளும் ரிஷிமுனி சித்தாதிகளும் அநுமாருடைய வருத்தங்
களைக்கண்டு ஆச்சரியமடைந்து அன்புகளையும் ஸ்ரீராமருடைய
கிருபானந்த மகிமைகளையும் நினைத்து புகழ்ந்து கொண்டாடி நின்ற
வர்களாய் ஸ்ரீராமலிங்கத்தின்பேரில் பாதிவால்சுற்றியிருக்கப் பாதிவா
லறுந்து கூப்பிடுந்தூரம் அநுமார் விழுந்துகிடந்ததைச் சகலமான
பேர்களுங்கண்டு கிடுகிடுவென்று நடுங்கி வேர்த்துப் பொறிந்து ஸ்ரீரா
மர் சீதை இலட்சுமணர் விபீஷணர் வானரவீராதிகள் தேவாதி தே
வர்கள் தவமுனிவர் ரிஷீஸ்வரர்கள் சித்தர்கள் முதலான எல்லோரும்
நின்றது நின்றபடியே கால்கை பதறிக்கொண்டு அநுமாரைப் பார்க்
கிறபோது அவர் கிடக்கிற பரிதாபங்களைக்கண்டு சகிக்கமாட்டாதவர்
களாய் விசனப்படுகிறதைக்கண்ட ஸ்ரீராமச்சந்திரர் தாரைதாரையாய்
க்கண்ணீர்சொரியும்படி பிரகாசித்தும் இலட்சுமணர் வாயிலும் வயிற்
றிலும் அறைந்துகொண்டு துக்கப்படுவதைச் சீதாதேவி கண்டு கோ
வென்று கூக்குரலிட்டுக் கடகடவென்று பூமியிலே விழுந்தழுதாள்.
எழுந்திருந்து தன்னுடைய இரண்டுகைகளினாலேயும் அநுமாருடை
ய அவயவங்களை இரத்தவெள்ளத்தினின்றுந் தடவியெடுத்தாள்.
அப்படி யெடுக்கிறபோது அநுமாரானவர் நைந்துருண்டுபோயிருக்
கிறதைக்கண்டு வானராதிகளும் தேவாதி தேவர்களும் தவமுனி
களும் சித்தாதிகளுங்கண்டு ஐயோ! ஐயோவென்று அபயமிட்டுமுகத்
தில்அறைந்து கொண்டு கோவென்றழுதார்கள். ஸ்ரீராமரும் அநுமா
ரைத் தோளோடே சேர்த்தணைத்து இந்த அவஸ்தையைப்பார்க்கவா
இருந்தோமென்று அநுமார் தலையைத்தாங்கி மடிமேலே வைத்தார்.
அப்போது தலைகட்டமாக நிற்காமல் குப்புறவிழுந்ததைப் பக்கத்
திலிருந்தசீதாதேவிகண்டு அடித்தும் விழுந்தும்எழுந்து தன்னுடைய

இரண்டு கரங்களினாலேயுந் தலையைத் தாங்கிக்கொள்ள ஸ்ரீரா மர் லட்சுமணர் முதலான சகலமான பேர்களுங் கண்களைத் துடை த்தும், இரத்தங்களைத் துடைத்தும் கோவென்றலறி அபயமிட்டுப் புலம்புவார்கள்:

நீ இப்படிப்போயிருக்க நாங்கள் கண்ணாலே பார்க்கவுங் காலம் வந்ததே! விபீஷணனை அடைக்கலங்கொள்ள நீதிசொன்னாயே. மகா விவேகசாலியான நீ ஒன்றுந்தோற்றாமல் இப்படி அவதிக்குள்ளா னாயே! இனியொன்றும் யோசியாமல் என்ஜீவனைப்போக்கடிக்கிறே ன். இனிமேல் உன்னைச் சாகக்கொடுத்துப்போட்டு நான் அயோத் திக்குப்போய்ப் பட்டாபிஷேகஞ் செய்து கொண்டு வாழ்ந்திருக்கவும் கூடுமா! அரசாட்சி செய்யவும் வேணுமா! நான் ராவணசங்காரஞ்செ ய்து பூசையை முடித்து இவ்வளவு வெற்றிகொண்டுவந்தது உன்னா லேயல்லாது மற்றப்போராலேயில்லையே? நானென்ன செய்யப்போகி றேன்! உன்னை நம்பியிருந்தேன். அயோத்தியாபுரிப் பட்டணத்திலே என் தம்பிமாருடன் என்னைச்சேர்த்து வைக்காமல் இரண்டகஞ் செ ய்து போட்டாயே! அனுமானே யென்று ஸ்ரீராமர் கண்ணீர் ஆறாக வோடப் புலம்பச்சீதாதேவி முதலான பேர்களும் அப்படியே அனுமா ருடைய புசபலபராக்கிரமங்களையும் மகிமைகளையும் நினைத்து நினைத் துக் கண்ணீர்கள் ஆறாய்ப்பெருகியோட அழுது புலம்புகிறபோது ஸ்ரீராமச்சந்திரருடைய கண்ணீர்களானது அனுமாருடைய தேகத் திற்போய்பெருகுகிறதினால் மயிர்க்காம்புகளிலெல்லாம் புகுந்து தாப சோப மயக்கங்களெல்லாந் தீர்ந்து கண்களை விழித்துப் பார்த்து உட ம்பில் செயமுண்டாகி தேவர்களெல்லாம் பலமுண்டாக்க ஸ்ரீராமச் சந்திரர் சீதாதேவி இலட்சுமணர் முதலான பேர்களுடைய கண்ணீ ர்களால் ஸ்நானம் பண்ணப்பட்டதினால் கந்தமாதனத்தின் சேதுவில் ஸ்ரீராமநாதனைத் தொட்டுப் பிடுங்கிப் போடவேணுமென்று நினைத்து அபசாரஞ்செய்த பாவம் விமோசனமாகி அஞ்ஞானங்களெல்லாந் தீ ர்ந்து ஞானோதயமாய்த் தோற்றப்பட்டதினால் ஸ்ரீராமச்சந்திரமூர்த் தியையுஞ் சீதாதேவியையும் அநேக தோத்திரங்கள்செய்து வணங்கி சகஸ்திரநாமங்களால் ஸ்ரீராமச்சந்திரருடைய கருணைப்பிரவாகங்களை யுஞ் சொல்லித் தோத்திரஞ்செய்து அடியேன் செய்த அபசாரங் களைப் பொறுத்து இரட்சிக்கவேண்டியதென்று சீதாலட்சுமி சமேத

விழிகள் பிதுங்கி நவத்துவாரங்கள்வழியே குபீர்குபீரென்று ரத்தங்
கள்கொப்பளிக்க ஆறுகள்போல்ரத்தங்கள் பெருக அநுமார் விழுந்த
அதிர்ச்சியால் பூமியில் பெலத்துவாரமபோலாகப் பள்ளமாய்த்தண்
ணீர்ஊற்றுகையில் பள்ளமாகித் தண்ணீர்பெருக இரத்தமுஞ்சலமும்
ஒன்றோடொன்றாய்ப் பெருகிச்சமுத்திரத்தில் அலைமோதினதெப்படி
யோ அப்படிப்போல அநுமாரானவர் தலைகுப்புற மூர்ச்சையடைந்
தது மல்லாமல் நாக்குவெளியே நீட்டிக்கிடக்க தேவாதி தேவர்களும்
வானராதிகளும் ரிஷிமுனி சித்தாதிகளும் அநுமாருடைய வருத்தங்
களைகண்டு ஆச்சரியமடைந்து அன்புகளையும் ஸ்ரீராமநாதனுடைய
கிருபானந்த மகிமைகளையும் நினைத்து புகழ்ந்து கொண்டாடி நின்ற
வர்களாய் ஸ்ரீராமலிங்கத்தின்பேரில் பாதிவால்சுற்றியிருக்கப்பாதிவா
லறுந்து கூப்பிடுந்தூரம் அநுமார் விழுந்துகிடந்ததைச் சகலமான
பேர்களுங்கண்டு கிடுகிடுவென்று நடுங்கி வேர்த்துப் பிரமித்து ஸ்ரீரா
மர் சீதை இலட்சுமணர் விபீஷணர் வானரவீராதிகள் தேவாதி தே
வர்கள் தவமுனிவர் ரிஷீஸ்வரர்கள் சித்தர்கள் முதலான எல்லோரும்
நின்றது நின்றபடியே கால்கை பதறிக்கொண்டு அநுமானைப் பார்க்
கிறபோது அவர் கிடக்கிற பரிதாபங்களைக்கண்டு சகிக்கமாட்டாதவர்
களாய் விசனப்படுகிறதைக்கண்ட ஸ்ரீராமச்சந்திரர் தாரைதாரையாக்
க்கண்ணீர்சொரியும்படி பிரகாசித்தும் இலட்சுமணர் வாயிலும் வயிற்
றிலும் அறைந்துகொண்டு துக்கப்படுவதைச் சீதாதேவி கண்டு கோ
வென்று கூக்குரலிட்டுக் கடகடவென்று பூமியிலே விழுந்தழுதாள்.
எழுந்திருந்து தன்னுடைய இரண்டுகைகளினாலேயும் அநுமாருடை
ய அவயவங்களை இரத்தவெள்ளத்திலிறங்கித் தடவிப்பிடித்தாள்.
அப்படி யெடுக்கிறபோது அநுமாரானவர் கைத்துவண்டுபோயிருக்
கிறதைக்கண்டு வானராதிகளும் தேவாதி தேவர்களும் தவமுனி
களும் சித்தாதிகளுங்கண்டு ஐயோ! ஐயோவென்று அடிபட்டுமுகத்
தில்அறைந்து கொண்டு கோவென்றழுதார்கள். ஸ்ரீராமரும் அநுமா
ரைத் தோளோடே சேர்த்தணைத்து இந்த அவதியைப்பார்க்கவா
இருந்தோமென்று அநுமார் தலையைத்தாங்கி மடிமேலே வைத்தார்.
அப்போது தலைகட்டமாக நிற்காமல் குப்புறவிழுகிறதைப் பக்கத்
திலிருந்தசீதாதேவி கண்டு அடித்தும் விழுந்தும்அழுது தன்னுடைய

இரண்டு கரங்களினுலேயுந் தலையைத் தாங்கிக்கொள்ள ஸ்ரீராமர் லட்சுமணர் முதலான சகலமான பேர்களுங் கண்களைத் துடைத்தும், இரத்தங்களைத் துடைத்தும் கோவென்றலறி அபயமிட்டுப் புலம்புவார்கள்:

நீ இப்படிப்போயிருக்க நாங்கள் கண்ணுலே பார்க்கவுங் காலம் வந்ததே! விபீஷணனை அடைக்கலங்கொள்ள நீதிசொன்னுயே. மகா விவேகசாலியான நீ ஒன்றுந்தோற்ருமல் இப்படி அவதிக்குள்ளாளுயே! இனியொன்றும் யோசியாமல் என்ஜீவனைப்போக்கடிக்கிறேன். இனிமேல் உன்னைச் சாகக்கொடுத்துப்போட்டு நான் அயோத்திக்குப்போய்ப் பட்டாபிஷேகஞ் செய்து கொண்டு வாழ்ந்திருக்கவும் கூடுமா! அரசாட்சி செய்யவும் வேணுமா! நான் ராவணசங்காரஞ்செய்து பூசையை முடித்து இவ்வளவு வெற்றிகொண்டுவந்தது உன்னுலேயல்லாது மற்றப்போாலேயில்லையே? நானென்ன செய்யப்போகிறேன்! உன்னை நம்பியிருந்தேன். அயோத்தியாபுரிப் பட்டணத்திலே என் தம்பிமாருடன் என்னைச்சேர்த்து வைக்காமல் இரண்டகஞ் செய்து போட்டாயே! அனுமானே யென்று ஸ்ரீராமர் கண்ணீர் ஆருக வோடப் புலம்பச் சீதாதேவி முதலான பேர்களும் அப்படியே அனுமாருடைய புசபலபராக்கிரமங்களையும் மகிமைகளையும் நினைத்து நினைத்துக் கண்ணீர்கள் ஆருய்ப்பெருகியோட அழுது புலம்புகிறபோது ஸ்ரீராமச்சந்திருடைய கண்ணீர்களானது அனுமாருடைய தேகத்திற்போய் பெருகுகிறதினுல் மயிர்க்காம்புகளிலெல்லாம் புகுந்து தாபசோப மயக்கங்களெல்லாந் தீர்ந்து கண்களை விழித்துப் பார்த்து உடம்பில் செயனுண்டாகி தேவர்களெல்லாம் பலமுண்டாக்க ஸ்ரீராமச்சந்திரர் சீதாதேவி இலட்சுமணர் முதலான பேர்களுடைய கண்ணீர்களால் ஸ்நானம் பண்ணப்பட்டதினுல் கந்தமாதனத்தின் சேதுவில் ஸ்ரீராமநாதனைத் தொட்டுப் பிடுங்கிப் போடவேணுமென்று நினைத்து அபசாரஞ்செய்த பாவம் விமோசனமாகி அஞ்ஞானங்களெல்லாந் தீர்ந்து ஞானேதயமாய்த் தோற்றப்பட்டதினுல் ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியையுஞ் சீதாதேவியையும் அநேக தோத்திரங்கள்செய்து வணங்கி சகஸ்திரநாமங்களால் ஸ்ரீராமச்சந்திருடைய கருணைப்பிரவாகங்களையுஞ் சொல்லித் தோத்திரஞ்செய்து அடியேன் செய்த அபசாரங்களைப் பொறுத்து இரட்சிக்கவேண்டியதென்று சீதாலட்சுமி சமேத

ரான ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியை வணங்கித் தெண்டஞ் சமர்ப்பித்து எழுந்திருந்து கைகட்டி வாய்பொத்திக் கொண்டு நின்று அப்போது சகலமானவர்களுஞ் சந்தோஷத்தை யடைந்து அநுமாரைக் கொண்டாடினார்கள்.

ஸ்ரீராமச்சந்திரரும் அநுமாரைப் பார்த்துச் சொல்லுவார்: வாராய்ப்பிள்ளாய்! அநுமானே! நான் மகாரிஷிகள் வாக்கியப்படிக்கும் ஆகம சாஸ்திரப்படிக்கும் சீதாதேவிகையினால் பாலிக்க சிவலிங்கத்தை வைத்துப்பூசைபண்ணினேன். அதைக்குறித்து நீ இப்படிக்கெல்லாம் மனதில் அகங்காரங்கொண்டு கோபித்துக் கொள்ளலாமா! நான் பூசித்த ஸ்ரீராமலிங்கத்தை முப்பத்துமுக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணாயிரமுனிவர்களும் கின்னரர் கிம்புருடர் கருடகாந்தருவர்களும், ஆதிசேடனும் தேவேந்திராதிகளும் பிர்மாதிகளும் விஷ்ணுவாதிகளும் ருத்திராதிகளும் ஒன்றாய்க் கூடிப் பேதிக்கவேணு மென்றாலும் பேதிக்கக்கூடாதே! அப்படியிருக்க நீ வீணாகச் சிறுபிள்ளைப் புத்தியைப்போல் இப்படிக்கொத்த யோசனைசெய்தாய். மகாபலம்பொருந்திய உன்னை என்னை தேவாதி தேவர்களை யெதிர்த்து சின்னாபின்னப்படும்படி யுத்தஞ்செய்து இப்போது மறந்துபோன இராவணன் இதற்குமுன் ஒருகாலத்தில் என்னப்பனாகிய சாம்பசிவமூர்த்தி வாசம்பண்ணிக் கொண்டிருக்கப்பட்ட கைலாசமலையைப் பேர்த்துப் போடவேணுமென்று யோசித்துப் பட்டபாடு இதற்கு முன் கேட்டிருக்கவில்லையா? முன் அந்தப் பரமேஸ்வரன் திருவிளையாட்டினிமித்தம் தேவாதிகள் கெர்வத்தை அடக்கவேண்டியதாய் ஒரு துரும்பை யெடுத்துமுன்னேபோட்டுப்பேதிக்கச் சொன்னபோது சகலமானபேரும் யோசித்து எல்லோருங் கூடிக்கொண்டு எடுத்தும் முடியவில்லை உன்னுடைய பிதாவாகிய வாயுபகவான் அநேக ஆங்காரங் கொண்டு சூராவளியாய்ச் சுழன்று சுழன்று பலமெல்லாங் கூட்டியடித்தும் மயங்கிப் போனதேதவிர அந்த அறுவைப் பேதிக்கக்கூடாமற் போய்விட்டது. அப்போதல்லவா அவனசையாம லணுவசையாது என்ற பழமொழிசொல்லி தேவாதிகளெல்லாம் என்னப்பனை வணங்கித் தோத்திரஞ் செய்தார்கள்?

இதுவும் நீகேட்டதில்லையா? இந்தச் சதுர்த்தசபுவனமும் அண்ட பிண்ட சராசரமும் விளங்காநின்ற எறும்புகடை யானைமுதல்

எண்பத்துநான்கு நூறுயிரங்கோடி ஜீவாத்மாக்களிலும் நிறைந்து எள்ளுக்குள்ளெண்ணெய்போலவும் எங்குப் லோகநாயகனுய் ஆதிமத்யாந்தரகிதனுய் திரிநேத்திரத்தோடும் விளங்கிய கர்த்தனுடைய மகிமைகள் உனக்குத்தெரியாதவொன்றுண்டா? அநேக வியாகரணமுதலாகிய சகலசாஸ்திரங்களும் அறிந்த உனக்கு நான் சொல்லவேண்டியதென்ன இருக்கிறது? அடியார்க்கெளியன் துஷ்டசங்காரன்சிஷ்டபரிபாலனன் காலனுக்குக் காலனானபடியால் அப்படிப்பட்ட கர்த்தவ்யத்துக்கு நீசெய்த அபசாரம் பொறுக்காதபடியினுல் இப்படிக்கொத்த துன்பங்களெல்லாம் நேரிடும்படியாச்சுது. ஆகிலும் நீசெய்தவபசாரத்தைக் கர்த்தன் எப்போதும் திருவுளத்தில் கொண்டருளத்தக்கதில்லை. அப்படி ஆராகிலுந் தீங்குசெய்தால் தண்டித்தும் நன்மைசெய்தால் ரட்சித்தும் விளங்கியகர்த்தன். மேலும் நீ கொண்டுவந்த இலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்யவேண்டியதால் நான் பிரதிஷ்டைசெய்த மிர்த்திகைலிங்கத்தை வாலாலேசுற்றிப் பிடித்து அசைத்தும் அந்தக்கர்த்தன்பொருட்டினுல் நீசெய்த வேலையே யல்லாது வேறில்லை, ஆகையினுல் நீசெய்தபிழையையும்பொறுத்துக் கருணுகடாட்சம்புரிந்து ரட்சிப்பார். உன்னைக் கைவிடமாட்டார். ஆனபடியினுல் நீவிழுந்த அதிர்ச்சியினுல் உண்டாயிருக்கின்ற பாதாளகங்கை உன்பேரால் தீர்த்தமாய் விளங்கிக்கொண்டு பூலோகத்தில் ஸ்நானம்பண்ணினபேர்களுக்கெல்லாம் பாவங்களை நிவர்த்திசெய்து புண்ணியங்களைக்கொடுத்துக்கொண்டிருக்கு மந்தவிடத்தில் பெருகியிருக்கின்ற ஜலம் ஆதிபரமேஸ்வரனுடைய ஜடாபாரத்தில் தரித்திருக்கின்ற கங்காநதியென்று சொல்லப்படும் பாதாள வாகினியாய்ப் புறப்பட்டிருக்கின்றது. அந்தத்தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினபேர்களுக்கு ஆயிரம் அஸ்வமேதயாகம் பண்ணினபலன் கிடைக்கும், கங்கை, யமுனை, சரஸ்வதி மூன்றுநதியையும் ஒன்ருகத் தியானித்து ஸ்நானஞ்செய்தபலனிலுங் கோடிபங்கு பலன் கொடுக்கும். நீவிழுந்து பெருகியிருக்கிற தீர்த்தம் உன்பேரால் அநுமதீர்த்தமென்று இதுமுதல் பூலோகமுள்ளளவும் விளங்கிக்கொண் டிருக்கும், அந்தத் தீர்த்தக்கரையில் யார் பிதிர்களுக்குத் திலதர்ப்பணஞ் சிரார்த்தபிண்டங்கள் செய்கிருர்களோ அவர்களுடையசெய்கைகளை நம்மாலளவிடக்கூடாது. நீவிழுந்த அநுமகுண்டத்தில் சிரார்த்தங்கள் செய்யாமல் மற்றவிடங்களில் செய்கிற சிரார்த்தங்களை அவரவர்கள் பிதிர்க்

தேவதைகள் கோபித்துக்கொள்ளுவார்கள். அவ்வளவு மகத்துவ முடையதாகும்.

அந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம்பண்ணித் தர்ப்பணஞ் சிரார்த்தம் முதலானவைகள் செய்யாதபேர்கள் மகாபாவிகளாகும். மகா துன்பங் களுடையவர்களும் இந்தத்தீர்த்தத்தில் தண்ணீர்பெடுத்துத் திலதர்ப் பணஞ்செய்தால் மாதாபிதா முதலானவர்கள் மோட்சமடைந்து நல் வாக்குக்கொடுப்பார்கள். நீ பூசைபண்ணுகிற சிவலிங்கமும் இப்படியே மேலானதாய் விளங்கிக்கொண்டிருக்கும். எங்குஞ் சிவமென்றாய்விள ங்கினாலும் நாம்பிரதிஷ்டைசெய்த ராமலிங்கத்துக்கு நீ பிரதிஷ்டை செய்யப்போகிற மகாலிங்கம் முதன்மையாகவிளங்கும். அந்தவிஸ்வலி ங்கத்துமுன்னாலே அபிஷேகம் நெய்வேதனம் சோடச உபசாரபூசை களும் நடந்து அப்பாலிந்தக்கந்தமாதனத்தில் நாம்பிரதிஷ்டைசெய்யு முன்னே கௌதமர் அஸ்தியர் பூசித்துக்கொண்டிருக்கிற அஸ்திர பூருவமகாதேவர் இரண்டு மகாலிங்கத்திற்கும் அபிஷேக நெய்வே தனமும் சோடசஉபசாரபூசைகளும்நடந்து அதின்பிறகு நாம் பூசிக்க ப்பட்ட ராமநாதனுக்கு அபிஷேக நெய்வேதனம் பூசை நடந்துகொ ண்டிருக்கும்படி வாக்குக்கொடுத்தோம். நீகொண்டுவந்திருக்கிற சிவலி ங்கத்தைப் பிரதிஷ்டைசெய்து பூசித்து வணங்கென்று வாக்குக் கொ டுத்தார். ஸ்ரீராமச்சந்திரமூர்த்தி இப்படி மகா பொறுமையுடன் கரு ணைபுரிந்து எப்போதுவாக்குக்கொடுத்தாரோ அப்போதே தமனமகிழ்ச்சி யடைந்து ஸ்ரீராமநாதனுக்கு உத்தரபாரிசத்தில் தான் கொண்டுவந்த சிவலிங்கத்தி லொன்றைப் பிரதிஷ்டைசெய்து லோகஹிதமாய்ப் பூசித்து ஒருலிங்கத்தைத் தன்னுடைய ஆத்மார்த்தமாய்ப்பூசித்து வணங்கித் தோத்திரஞ்செய்தார்.

அப்பால் ஸ்ரீராமலிங்கத்தில் அனுமார்வாலினால் சுற்றியிழுத்து அசைத்தபோது பட்டழுந்தினது மூன்றுரேகைபோல் விளங்கிக் கொண்டிருக்கிறது. இப்போதும் காணலாம். கேட்டீர்களோ மகாரி ஷிகளே! யென்று நைமிசாரண்ணியத்து ரிஷிகளைப்பார்த்துச் சூதமு னீஸ்வரர்சொல்ல ரிஷீஸ்வரர்கள் சொல்லுவார்கள்: இதுவரையில்நாங் கள்கேட்ட கதையினுடைய விர்த்தாந்தம் ஆச்சரியமா யிருக்கிறது. அது காரண மென்னவென்றால், மகாகொடுமைகளுக் தேவர்களுக்கு

இடுக்கணும் ஸ்ரீராமச்சந்திரருக்குத் துக்கமுமுண்டாகும்படி நீதிதப்பி நடந்த சண்டாளனாகியராவணனைக்கொன்ற தோஷந்தீரச்சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து பூசித்தாரென்பது சரியே. அந்தராவணன் பிரம குலமாயில்லையே. அந்தச்சண்டாளனாகிய ராவணனைச் சங்காரஞ் செய்தபிரமகத்திராமச்சந்திரரைப் பீடிக்கவேண்டிய காரணமென்ன? அதுகாரணங்களைச் சொல்லவேணுமென்று மகாரிஷிகள் கேட்கச்சூத மகாமுனிவரும் சொல்லுவார்: நீங்கள் அறியாமை யுள்ளவர்கள்போ லக்கேட்டது மிகவு மாச்சரியமாயிருக்கின்றது. ஆகிலும் சொல்லுகி றோம்: இப்போது நீங்கள் கதை புராணம் சாஸ்திரங்கள்கேட்டு அறிந்துணர்ந்தும் இதுகாரணந் தெரியாமலிருந்துவிட்டீர்கள். உங் களுக்குத் தெரியும்படியாய்ச் சவிஸ்தாரமாய்ச்சொல்லுகிறோம்.கேளு ங்களென்று ராமச்சந்திரருக்குப் பிரமகத்தி வந்தகாரணங்களையும் அப்பாலே ராமநாதருடைய பாதாரவிந்தத்தில்வணங்கி விடைபெற் றுக்கொண்டு ராமச்சந்திரர் முதலானபேர்கள் எழுந்தருளியவிர்த்தாந் தங்களையும் நைமிசாரண்ணியமுனிவர்களுக்குச் சூதமகாமுனியுஞ் சொல்லுகின்றார்.

---

சசூ - வது.

## பிரமஹத்தி விமோசன மகத்துவம்.

---

இராமச்சந்திரருக்கு இராமநாதர் பிரசன்னமாய்த் தரிசனந்தந்த வுடனே இராவணன் பிரமகத்தி இராமசுவாமியைவிட்டோட்டம் பிடித்தது. அதை யாவரேனுங்கண்டு பீதிகொள்வதா யிருக்குமென் றெண்ணி இரகுராமர் தனுவினாலொரு கெபியையுண்டாக்கி அதில் அப்பிரமகத்தியைத்தள்ளி அதன்மத்தியிற் பைரவரைக் காவலாயி ருக்கும்படி பிரதிஷ்டைசெய்து ஓர் தீர்த்தமுண்டாக்கி அதில் ஸ்நா னஞ்செய்தார். அந்தத்தீர்த்தம் பிரமகத்தி விமோசனமெனப் பெயர் பெற்று இராமலிங்கத்திற்கு அருகாண்மையாய் உத்தரபாகத்தி லிருக்கின்றது.

## சங்கரபாண்டியன்மகத்துவம்.

சந்திரகுலத்துதித்துப் பாண்டிநாட்டை யரசாண்ட சங்கரபாண்டியனென்பவன் விபினவேட்டையாடுகையில் ஓர் தருவினடியிற் புலித்தோலைப் போர்த்துக்கொண்டு நிஷ்டைசாதித்திருந்த சகல முனிவரையும் அவர்பத்தினியையும் புலிகள் ஜோடியாயிருக்கிறதாக நினைந்து அம்பினாலெய்து கொன்றுவிட்டான், அதைக்கண்ட அம் முனி புத்திரனான சாங்கலன் ஆறுக்கவலைகொண்டு ஆங்குள்ளரிஷிகள்வாக்குப்படி சாவுற்ற தாய்தந்தையரைத் தகனஞ்செய்து அஸ்திகளையெடுத்துச்சென்று இராமேச்சுரமென்னுந்தலத்தில் ஓர்புடை ஸ்நானஞ்செய்து சேது தனுக்கோடியாதி ஸ்நானம்பண்ணிப் பிதிர்கர்மங்கள் நடாத்தி ஓராண்டுவரையில் இராமேச்சுரரை வழிபட்டிருக்குங்கால் ஒருநாள் கனவில் தனதுதந்தை கலுழன்மீது விஷ்ணுவினுடைய பஞ்சாயுதமுதலியன தரித்துவர அன்னையுடன் கண்டுகளிசிறந்து தலைமீக்கொண்டு கூடல்நகர்குறுகினான். மேனிகழ்ந்தியசங்கரபாண்டியன் அங்குவசிக்கும் முனிவர்களால் தூஷிக்கப்பட்டு இனி உயிர்வாழேனென்று அக்கினிகுண்டமேற்படுத்தி அதன்கண் வீழ்தற்காகப் பிரதட்சணமாய்வந்தான். அக்காலத்தில் சிவபெருமானருளால் ஆகாயவாணி அதிர்த்தபிரகாரம் முனிவர்கள் சம்மதத்தோடு தீக்குண்டம் பாய்வதை நிறுத்தித் தன்பத்தினி புத்திரர்களுடனே திருவிராமேச்சுரத்தில் வந்திருந்து ராமலிங்கமூர்த்திக்கு அபிஷேகம் நிவேதனமுதலிய சோடசோபசாரங்கள் நடப்பித்துப் பத்துப் பாரம் பசும்பொன்னல்கி தினமும் பிராமண போசனம்செய்வித்துத் தக்ஷிணைகள் பொன்னாற் பிடிபிடியாகக்கொடுத்துத் தானும் ஏககால போஜனமாய்ச் சதாவிரதம் சாதித்து தனுக்கோடிதீர்த்தத்தில் நித்தியமுழுகிக்கொண்டு இராமலிங்கதரிசனங்கண்டுகொண்டு வருதலில், கூகூ0-ம் நாள் சாயுங்காலவேளையில் ராமநாதசுவாமியின் திருக்கோயிலில் சிவஸ்தோத்திரம் செய்துகொண்டுநின்ற அந்தச் சங்கரபாண்டியன் முகத்திலிருந்து கரியகாளம்போல் தேகமும் பிறையைப் போல் வச்சிரதந்தமும் சிவந்தமயிரும் கோரை மீசையும் கறுத்ததேகமுமுடைய பிரமகத்திப்பேயானது அலறிக்கொண்டு வெளிப்பட்டது. அதை இராமேச்சுரர் கருணையால் திடீரென்று பைரவமூர்த்தி சூலகபாலங்களுடன்தோன்றி வளைத்துப் பிடித்துக் கழுமுள்ளாற்

குத்தி உயிர்கவர்ந்தார். அங்ஙனம் பாண்டியராஜனும் இராமநாதசுவாமியைப் பிரசன்ன தரிசனம்கண்டு நல்லவரங்களைப் பெற்று அவர் இலிங்கத்தினிடமாய்த் திரோபவப்பட்ட பின்னர்த் தேவப்பதியை விட்டேகி முன்னைய முனிவர்களையுந் தரிசித்துக்கொண்டு மதுரை நகருறைந்தாய்ந்து சிவகதியெய்தினன்.

---

## சேதுமாதவர் மகத்துவம்.

---

மதுரையிற் செங்கோல்செலுத்திய சந்திரகுலத்துப் புண்ணியநிதியென்னும் பாண்டியன் இராமேச்சுரத்தின்கண் வசிக்க அபேட்சித்துத் தன் செங்கோலைப் புத்திரனிடமொப்புவித்து இராஜபத்தினியுடன் மகா க்ஷேத்திரமாகிய இராமேச்சுரத்தின்கண் வந்திருந்து சங்கபாண்டியனைப் போலவே சிவதரிசனம்செய்து பல சற்கருமமியற்றி விஷ்ணுவைக் குறித்து ஓர்யாகமும் நிறைவேற்றினன். அவனுடைய விசுவாசத்தை அறியவேண்டுமென்று லட்சுமிதேவியானவள் மகாவிஷ்ணுவினிடம் தெரிவித்துக் கொண்டனள். அதற்கவர் சிற்றமுற்றதுகண்டு உடனே அவரும் வைகுண்டம்விட் டிழிந்து தனுக்கோடியிலிருந்து திரும்பிவருகிற புண்ணியநிதியுடைய திருஷ்டிக்கு எட்டுப்பிராயமுள்ள பெண்ணாய் மகாதேசசுடனே அந்த ஸ்நான யெட்டகத்திற்றனே காணப்பட்டாள். அச்சிறுமியை யவன் தன்னுடைய ஓர் புத்திரனுடன் உன்னையுமோர் புத்திரியாய்ப் பாதுகாப்பேனென்று உறுதிசொல்லி யழைத்ததற்கு அவளுடன்பட்டு உடன்சென்று இராஜபத்தினியான விந்தாகினியென்பவள் செவ்வியகாங்களைத் தானுறையும் பத்மபீடமாய் நினைந்து சித்ர விசித்ரமாய் வளர்ந்து சகலசெல்வங்களையும் அபிவிர்த்தியாகும்படி செய்துகொண்டிருந்தாள். விஷ்ணுமூர்த்தியானவர் தேவி பிரிந்து போனதைப் பற்றித் திருவாழிடங்களெங்கணுந்தேடி இறுதியிற் கந்தமாதனச் சார்பில்வந்தார். ஆங்குச் சில சேடியர்களுடன்கூடிப் பூக்கள் கொய்து செல்வி விளையாடுவதைக் கண்டு தன் சொரூபந் தெரிந்தால் மறைந்தோடி விடுவாளென்றெண்ணி தசரதராமன் இலிங்கப்பிரதிஷ்டைசெய்யுங்காற் கொண்ட சிவவேடம்போலத் திருமேனியெல்லாங்

திருநீறும் உருத்திராட்சமாலைகளுமாகக்கட்டி அநேகோங்கவணி
ந்து விரலிற் பவித்திரந்தரித்தவராய் வெண்பட்டுடுத்தி திரிபுண்டரந்
தீட்டி கங்காசலத்தைக் காவடிகட்டிச்சுமந்து எவருமிப்படிச்செய்
வதனால் சாமநாதனுக்குச் சதா சந்தோஷம் பெருகும்படியாய்க் கா
சியாத்திரைசெய்துவரும் வேதியனைப்போற் சுந்தர நவஸ்வரூபத்
துடன்வந்து இலக்குமியாகிய இளம்பிடியின் கரத்தைத்தாமதமில்லாது
பற்றியிழுத்தார். அப்போது அவளகம்பதறிக் கையையுதறித் திமிறி
ப்பிடுங்கிக் கொண்டு சேடியர்களுடன் கூக்குரலிட்டாள். அதைத இரா
ஜனதிங் தோடோடியும்வந்து சங்கதியையறிந்து தண்டவீரர்களை
அழைப்பித்து கலகம்விளைத்த இந்தத் துஷ்டப்பிராமணனைக் கட்டிக்
கொண்டுபோய் இராமேசருடைய சந்நிதானத்தெதிரிழுத்திச் செவ்
வேபுடைத்துக் காலில் விலங்கிட்டுத் திருக்கோயிலுக்கு மேற்கிலுள்
ள ஒரு மண்டபத்தறைக்குள்ளாகப்போட்டுக் கபாடபந்தனஞ்செய்
து காவலிருக்கும்படி செய்யுங்களென்று திட்டஞ்செய்தான். அப்பால்
வேதியனாகிய விஷ்ணு தமது சித்விலாச சொரூபத்தை அவ்வாச
னுக்குக் கனவிற் காண்பித்தார், உடனே நித்திரைதெளிந்தெழு
ந்த மன்னன் தன்குமாரத்தியைப்போய்ப் பார்க்கும்போது கனவிற்
கண்ட இலட்சுமி அவளாயிருக்க நனவிலுங்கண்டு மகிழ்ந்தான், விடி
ந்தவுடன் புத்திரியைக்கூட்டிக் கொண்டு காவலில் வைத்திருக்கிற
வேதியனைவந்து பார்த்தனன், அப்போதவ்வேதியன் இலக்குமிநாய
கனான விஷ்ணுவாயிருக்க வீட்சணித்தான். அப்பால் தன்னுடைய
அறியாமையை நினைந்து வழுத்தி வழுத்தி வருந்தி இருவரையுந் து
தித்தான், அத்தருணம் மாதவனவர் அரசனே புரிந்த விஷயங்க
ளெல்லாம் மிகவும் நம்மேல்வைத்த அன்போடுள்ளவையால் அவைக
ளெமக் கதிகமுந்திருப்தியே. உன்னுடைய விசுவாசத்திற்குத்தக்கப
டி இலக்குமி மகளானாள். யாம் மருகனானோம். உன்னுடைய நீதிமிக
அழுறுதியுள்ளதே. எம்மைத்தண்டித்துக் காவலில்வைத்த இவ்விடத்
தில்யாமென்றும் விளங்கிக்கொண்டிருப்போம், பரமசிவன் ஆங்கு
மூர்த்திகரித்து வீற்றிருப்பதால் யாமு மிங்கிருக்கப் பிரீதிகொண்
டோம். இதனாலெமக்குச் சேதுமாதவனென்றும்பேர் விளங்கும். சேது
விலுள்ள தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்து ராமலிங்கதரிசனம் காண்
பவர்களும், காசியிலிருந்து கங்கைகொண்டு ஈஸ்வரனுக் கபிஷேகஞ்
செய்பவர்களும்இவணெம்மை அவசியந்தரிசிக்கப்பெறுவார்களெல்லா

நலன்களும் பயப்பார்களென்றருளிப் பாண்டியனுக்குப்பலவரங்களைக் கட்டளையிட்டுத் திருமாலுடன் அந்தர்த்தான மாயினர். அவர்தான் கந்தமாதனத்தின்கண்ணே சேதுமாதவனெனவிளங்கத் தக்கவராவர். பிறகு புண்ணியநிதியாகிய பாண்டியன் தன்நகரஞ்செல்வதின்றி அங்கேயேவசித்து முடிவிற் பிரியதபத்தினியுடன் நற்பதவியடைந்தனன்.

## சேதுயாத்திரைமகத்துவம்.

சேது தனுக்கோடியென்னும் தீர்த்தத்தையுடைய சேதுவில் யாத்திரைசெய்ய இச்சிக்கிறவர் இயன்றமட்டுந் தானதருமங்களைச் சற்பாத்திரர்களுக்கு வழங்கி விபூதி உருத்திராக்க மாலிகாபரணங்களணிந்து அங்குலியிற் பவித்திரமிட்டு சேதுயாத்திரைபண்ணிவரக் கடவாய் என்று சங்கற்பஞ்செய்து ஏகமனதாய் பஞ்சாட்சரத்தையேனும் அஷ்டாட்சரத்தையேனும் உச்சரித்தபடியே பக்தி சிரத்தையுடன் கிரகத்தைவிட்டிறங்கி கையில் ஆயுதங்களில்லாமல் சத்திரம் பாதுகைகளை யுபயோகப்படுத்தாமல் தாம்பூலந்தரியாமல் எண்ணெயிட்டுக்கொள்ளாமல் ஸ்திரீயின்பத்தைக் கருதாமல் ஏககாலபோஜனமே செய்துகொண்டு வீண்வார்த்தைகளை விரும்பாமல் வழங்காத மார்க்கங்களில் எவ்விதத்தும் நித்திய கருமானுஷ்டானங்களைத்தவறவிடாமல் அறங்களைச்சாத்தியம்போலுதவிச்சென்றுசேது மூலத்தின்கண்வந்து வருணனைப்பிரார்த்தித்துச் சமுத்திராசனைப்பூசித்து திருமாலைவணங்கி அநுமதிபெற்று ராமலட்சுமணசீதாசமேதராய் விளங்கப்பட்டவரையும் பெரியோர்களையுஞ்சிந்தித்து வணங்கி பரமசிவனையும் பத்மநாபனையும் இருதயத்திலே தியானித்துவழிபட்டு அம்மூலத்தில் ஸ்நானம்பண்ணியெழுந்து மீண்டும் ஸ்நானஞ்செய்து சூரிய நமஸ்காரம்பண்ணிமறுபடியுமுழுகி நியமநிஷ்டைகளைமுடித்துத் தருப்பைசயனம்வந்து ராமனைத்தரிசித் தப்பால் தேவிபட்டணம்வந்து நவபாஷாணத்தில் நவக்கிரகபூஜைசெய்து பிதிர்தர்ப்பணமியற்றிக் கரையேறி உலர்ந்தவஸ்திரந்தரித்து ஆசமனஞ்செ

ய்துசிரார்த்தாதிகளை நடப்பித்து அதன்மேல் மேற்கூறியவிதமாகவே
சக்கரதீர்த்தத்திற் குடைந்து அங்ஙனம்பள்ளிகொண்ட பெரு
மாளைப்பாவி நடந்து வேதாளதீர்த்தம் சீதாகுண்டம் இரணவிமோ
சனம் இவைகளிலாடி இலட்சுமணதீர்த்தக்கரையையெய்தி முண்டி
தஞ்செய்யவேண்டியதுசெய்து அத்தடத்தில்மூழ்கிஇராமதீர்த்தத்திற்
படிந்து பூமிபொன்முதலிய தானம் பூசுரர்க்களித்து பாவநாசத்திற்
தளித்து பின்னர் கங்கை, யமுனை இவைகளிற் றோய்ந்து இசைந்த
நானங்கள்வழங்கி சாவித்திரி சரசுவதி காயத்திரி அனுமகுண்டம்
பிரமகுண்டம் நாகதீர்த்தம் அகஸ்தியதீர்த்தம் இவைகளில் முறை
யேமூழ்கி அக்கினிதீர்த்தக்கரையையடைந்து குடைந்து அங்குள்ள
சிரார்த்தாதிகளைச்செய்து வேதாந்தமுணர்ந்த உத்தமவேதியர்கட்கு
ஹிரண்யம் கோ பூமியாதி தானங்களையும் அங்ஙனேநல்கி இங்ஙனம்
கூறியமுறையேயாயினும் தமக்கியன்றபடியேயாயினும்மூழ்கிநடந்து
இராமலிங்கத்தைவணங்கி பின்னர் சேதுமாதவரைத் தொழுது
இராமர் இலட்சுமணர் ஜானகி இவர்களைஇறைஞ்சி தனுக்கோடிதீர்த்
தம் கோடிதீர்த்தம் இரண்டுமொழிய ஏனைய தீர்த்தங்களிலெல்லாம்
அங்ஙனந்தோய்ந்து மீட்டு இராமலிங்கத்தை வழிபட்டு தனுக்
கோடிக்கரைகுறுகி, அதில் விதிப்படி மூழ்கிக் கரையேறி சிரார்த்
தங்களை இயன்றபடியியற்றித் தானங்கள்கொடுத்துத் திரும்பிவந்து
கோடிதீர்த்தத்திற்குளித்து அங்கண் லோபமின்றி இயன்றமட்டும்
பாற்பசு சுவர்ணம் நிலம் ஆடைமுதலிய தானங்களை உத்தமவேதி
யர்கட்கீந்து இராமநாதசுவாமியையும் பருவதவர்த்தனி யம்மையை
யும் தரிசித்தஞ்சலிசெய்து மும்முறை வலம்வந்து நாவாரவாழ்த்தி
விடைபெற்று சேதுமாதவரைத்தரிசித்து தாழ்ந்து செலவுவாங்கிக்
கொண்டு தங்கள்பதியெய்தி பிராமணபோசன மியன்றமட்டும் நடாத்
திச் சன்மார்க்கத்திலிருப்பதே நல்ல புண்ணியவசமாம். சேதுயாத்
திரைசெய்யவென்றுவந்து திரவியாபிமானத்தாற்செய்யாது சென்ற
வர் மிக்க பாவிகளாவர்..

---

## சேதுபலமகத்துவம்.

---

சேது தனுக்கோடிதீர்த்த ஸ்நானமானது மாசிமகத்திலும் சூரி
யகிரகண சந்திரகிரகண புண்யகாலங்களிலும் சங்க்ரமணம் தக்ஷி

ஞுயந உத்தராயண புண்ணிய காலங்களிலும், பௌர்ணமியிலும், சோமவாரமும் பௌர்ணமியுங்கூடிய தினத்திலும் அமாவாசியிலும் மாசிமாதத் துதயகாலத்திலும் நல்லபலனை மிகுதியுங் கொடுக்கும். மாசிமாதத்தில் ௩-௫-௧0-௧௫-௨0-௨௬-௩0-தினமளவிலும் தொடர்ச்சியாய் உதயகாலத்தில் முழுகுவதினாலும் ஒன்றற்கொன்றுவிசேஷித்தபலனைக்கொக்கும். இன்னமும் அர்த்தோதயம் மஹோளய மென்கிற மகாபுண்ணியகாலங்களிற் செய்யப்படும் சேது தனுக்கோடிஸ்நானபலனைக் கணக்கிட்டுச்சொலற்கரிதாயிருக்கும். அர்த்தோதயமென்பது சகலநட்சத்திரங்களிலுஞ் சிரேஷ்டமென்கிற திருவோணமும் சகலதிதிகளிலு முத்தமமென்கிற அமாவாசையும் சகல யோகங்களிலும் நன்மையென்கிற விதிபாதமும் சகலவாரங்களிலும் பிரதமமென்கிற ஆதித்தவாரமும் மகாரவியில் ஒன்றாய்ச்சேருங்காலமாம். இஃது அன்றுதினஞ் சூரியன் அர்த்தோதயத்துக்கேசொல்லப்பட்டது. மேற்குறித்த நட்சத்திராதி மூன்றுஞ் சோமவாரத்தில் வருவது மஹோதயமாம். இந்தமகாபுண்ணியகாலங்களில் எவ்விடத்திலேயாவது இராமதனுக்கோடி தீர்த்தத்தைநினைத்து ஸ்நானஞ்செய்யினும் அந்தப்புண்ணியம் லபிக்கு மென்பது சாமானிய சம்மதமாம், மற்றும் க்ஷேத்திரங்களிலுள்ள சமுத்திர ஸ்நானம் எப்பொழுதுஞ்செய்யலாமென்று விதியேற்பட்டிருப்பினும் அங்ஙனம் புத்திரசந்தானம்வேண்டினவர்கள் மங்கள்வாரம் மந்தவாரம் இரண்டினும் ஸ்நானம்பண்ணற் கிடங்கொடுக்கவில்லை, அன்றி கருப்பிணி, கருப்பதீட்சையுடையவன், சூதகமுடையவன், பிதிர்க்கருமம் நிறைவேற்றுதவன் இவர்களுக்கும் அப்படியே இடங்கொடாதிருக்கிறது. தனுக்கோடியாகிய சமுத்திரஸ்நானமோ எவருக்கு மிடங்கொடுத்துத் திதிவார நட்சத்திரமுதலிய காலங்கள் தேவையின்றி எக்காலுமுழுகச்சொல்லியிருக்கிறது. ஒருவன் அதில் ஸ்நானஞ்செய்யும்போது மற்றொருவனையுநினைத்து அவனுக்காக ஸ்நானம்பண்ணுவானேல் அதற்குள்ளபலன் உண்டாகுமென்று தீர்க்கப்பட்டதாயிருக்கிறது. ஆனால் இறந்தாரைக்குறித்துமட்டும் அப்படி ஸ்நானம் பண்ணக்கூடாது. பண்ணவேண்டியதேல் தருப்பையினாலேனும் சுவர்ணத்திலேனும் இறந்தவரைநிருமித்துப் பெரியோர்களாற் பிராணவிதிமந்திரத்தைச் சொல்லும்படிசெய்வித்து முழ்க விட்டுவிடலாம்.

சேதுமகத்துவம் முழுதும் கேட்கவேணுமானால் அநேககோடி கற்பகாலஞ்சென்றாலும் சொல்லமுடியாது. அப்படியிருக்க இந்தச் சூதரால் சொல்லுகின்றதெல்லாம் உண்மையா யிருக்கின்றது. சகல வேதார்த்தங்களுஞ் சகல சாஸ்திரபுராணங்களும் இதுவேயல்லாமல் மற்றொன்றும் மேலாகமாட்டாது. மோட்சானந்தாதிபோகமும் இந்தச் சேதுஸ்தலபுராணத்தில் அடக்கமா யிருக்கின்றதென்று வேதவியாசரால் வரப்பிரசாதங் கட்டளையிட்டு மகாரிஷிகளை நைமிசாரண்ணியத்துக்கு அனுப்பிவிட்டு சூதமகாரிஷியுடனே கைலாசத்துக்கு எழுந்தருளினார்கள்.

சாக்ஷிக்கணபதி தெரிசனை.

இராமேஸ்வரம் ரஸ்தாவில் காட்டுப்பிள்ளையார் கோவிலென்ற சாட்சிவிநாயகர் தெரிசனை செய்யவேண்டியது.

சகலதேசங்களிலுஞ்செய்த பாவநிவர்த்திக்காக ராமேஸ்வரம் வந்து தீர்த்தமாடியபின் அந்தச் சேத்திரத்திற்செய்த மலமூத்திரம் உச்சிட்ட பாவநிவர்த்திக்காக மேற்படி விநாயகர் தெரிசனம் அவசியஞ்செய்யவேண்டியது.

கவி.

ஆர்த்ததிரைக் கடலாடை யங்கவிட மெங்களுஞ்சென் றளவிலாது, கீர்த்திதரு மெனினவற்றின் கிடைப்பரிதா மெனிற்சீதைகேள்வன் போற்றும், ஏர்த்தபுனல் மதிவேணி இராமேசன் புராணத்தை யெழுது மன்பர், தீர்த்தலரும் பவந்துடைத்துச் சாயுச்ய பதம் பெறுவர் திண்ணந் தானே.

இந்தமான் மியமிருக்கு மில்லிடமே யெழிற்சேது வென்னிலாங்கண், மந்தனெழு தற்கிரக பீடையிலா திகளால்லை மருளவேதான், முந்துபயஞ் சோரர்பயந் தீர்ந்துவிடு மேநான்கு மொழியுந் தீர்த்தந், கந்தமா தனமண்மா லிராமநா யகனுறும் கலந்து வாழ்வார்.

இக்கதையைப் படித்தோர்கள் புகழ்ந்தோர்கள் கேட்டோர்கள் எவரும் போற்றத், திக்கெங்கும்புகழ்கீர்த்தி படைத்திடுவர் மேன்மேலுஞ் செல்வமோங்கும், மக்களையும் பெற்றுமிக வாழ்ந்திருந்து சேதுவின்றன் மகிமை யாலே, யெக்குலமும் பவித்திரமாய் நித்தியமங் களமாக விருப்பர் முற்றே.

இராமேச்சுரமான்மியமென்னும்

சேதுமகத்துவம்

முற்றிற்று.

---



# நாகலிங்கம் பிள்ளையவர்கள்

## இராமேஸ்வரம் புஸ்தகஷாப்

## ஸ்ரீராமநாதசுவாமிபேரில் பாடிய

# போற்றிப்பதிகம்.

---

### காப்பு.

அத்துவித வழியருளும் அனங்கன்வா ழியையகற்று மைந்து
பூத, மொத்தவொருநிலையாக்கி ஓங்குபத வியையளிக்கு முயர்வுண்
டாக்குஞ், சுத்தசை தன்யமதாய்ச் சுடரொளியா யெவ்வுயிர்க்குந்
துலங்கா நின்ற, மத்தகஜ முகனுகு வாகனமும் கணபதியின் மலர்த்
தாள் தானே. (௧)

### தேவாரப்பண் நேரிசை.

உம்பர்நா யகனே போற்றி உயர்மதிச் சடையாய் போற்றி
அம்புயக் கண்ணன் வேத னார்க்கரி தானாய் போற்றி
தம்பமென் றடைந்த தொண்டர் தமக்கருள் செய்தாய் போற்றி
நம்பினேன் சேது ராம நாதனே போற்றி போற்றி. (௨)

ஆதியே முதலே போற்றி அருமறைப் பொருளே போற்றி
சோதியே சுடரே போற்றி சுயம்பிர காசா போற்றி
பாதியே மூவர் போற்றிப் பணிந்திடும் பரனே பைம்பொன்
சேதுவில் மேவி வாழுந் தேவனே போற்றி போற்றி. (௩)

வாசவன் மறைவல் லோனும் வந்துவந் திறைஞ்ச நித்த
பூசித முதல்வா தேவைப் புரக்கும்ரா மேச்சு ரத்தில்
மாசிலா தெழுந்த மூர்த்தி மலைமகள் பாகம் வைத்து
நேசமா யென்னை யாளும் நிர்மலா போற்றி போற்றி. (௪)

சச்சிதா னந்த மோன சதாசிவப் பொருளே போற்றி
எச்சகம் போற்றும் வேத இறைவிதன் பாகா போற்றி
நற்சுடர்க் கண்ணா யென்னை நாளுமாட் சிப்பாய் போற்றி
பச்சைமால் தேடிக் காணாப் பரஞ்சுடர்க் குருவே போற்றி. (௫)

விரிபுவி வானம் சொர்க்கம் மேலமற் றவை யென்னும்
மறிகடல் புவியின் வேதன் மனுக்களும் படைத்துக் காத்துத்
திரிபுர மெரித்து மாரன் செடமெலாந் தாக்கி நின்ற
ஆரிதவ மேகச் செய்யு மாதிரா மேசா போற்றி. (௬)

முப்பரம் பொருளே தேவர் முதல்வனே முடிவி லாத
கற்பகக் கனியே மோனக் கடவுளே கருணை வாழ்வே
துப்புர வுமையாள் பாகந் துலங்கிரா மேசு ரந்தில்
நற்பத மருள்செய் ராம நாதனே போற்றி போற்றி. (எ)

வேதன்மாற் கரிதாய் நின்றாய் விருந்துக்கோர் பிள்ளை தின்றாய்
சீதள மதிபு னைந்தாய் திகழ்கரி யுரியைப் போர்த்தாய்
மாதவ யோகி யோரும் வந்துனைக் காணொ ணாத
காதனே யிராம நாதா நாண்மலர்ப் பாதம் போற்றி. (அ)

தேசுலவும்மலர்மிசையோன்தேடவரிதாயிலகுஞ்செல்வாபோற்றி
பாசவினைத்தொடராறுக்கும்பரமாதிப்பொருளானபரமேபோற்றி
பேசரியதிருமார்பன்பவமகற்றியெனையாண்டபித்தாபோற்றி
வாசரமகோசரமேபழம்பொருளேசுடரொளியேமலர்த்தாள்போற்றி

பந்தவினைப்பவங்களெல்லாம்பரந்தோடும்சாயுச்யபதவிசேர்க்கும்
இந்திரன்வானோர்போகமெய்திடுவரிணையொருவரில்லாதாக்குஞ்
செந்திருவாழுயர்வுபெறுஞ்சேதுநகர்செழித்தோங்குஞ்சித்தானந்தச்
சந்திரசேகரர்பதத்தைத்தான்பணிந்தோர்க்கிவையெல்லாந்தழைக்கு
மாதோ.

திருச்சிற்றம்பலம்.

தாயுமான சுவாமிகள் பாடிய

## ஸ்ரீ பர்வதவர்த்தனி அம்மன் பதிகம்.

---

பதியுண்டு நிதியுண்டு புத்திரர்கள் மித்திரர்கள்
பக்கமுண் டெக்காலமும்
பவிசுண்டு தவிசுண்டு திட்டாந்த மாகயம
படரெனுந் திமிரமணுகாக்
கதியுண்டு ஞானமாங் கதிருண்டு சதிருண்டு
காயசித் திகளுமுண்டு
கறையுண்ட கண்டர்பா லம்மைநின் றருளிற்
கருத்தொன் றுமுண்டாகுமேல்
கதியுண்ட கடலெனச் சமயத்தை யுண்டபர
ஞானவா னந்தவொளியே
நாதாந்த ரூபமே வேதாந்த மோனமே
நானெனு மகந்தைதீர்த்தென்

மதியுண்ட மதியான மதிவதனை வல்லியே
மதுரருக னென்றங்கையே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெ ணுமையே. (க)

கொட்டிலே வலியமட மாதவர்வாய் வெட்டிலே
சிற்றிடையி லேநடையிலே
சேலொத்த விழியிலே பாலொத்த மொழியிலே
செயமிறை நுதற்கீற்றிலே
பொட்டிலே பவர்கட்டு பட்டிலே புனைகந்த
பொடியிலே யடியிலேமேல்
பூரித்த முலையிலே நிற்கின்ற நிலையிலே
புந்திதனை நுழையவிட்டு
கெட்டிலே யலையாம லறிவிலே பொறையிலே
நின்னடியர் கூட்டத்திலே
நிலைபெற்ற வன்பிலே மலைவற்ற மெஞ்ஞான
நேயத்தி லேயுனிருதாள்
மட்டிலே மனதுசெல நினதருளு மருள்வையோ
வளமருவு தேவையாசே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெ ணுமையே. (உ

பூதமுத லாகவே நாதபரி யந்தமும்
பொய்யென் றெனைக்காட்டியென்
போதத்தி னடுவாகி யடியீறு மில்லாத
போதபூ ரணவெளிக்குள்
ஏதுமற நில்லென் றுபாயமா வைத்தனினை
வெல்லான்செய் வல்லசித்தாம்
இன்பவுரு வைத்தந்த வன்னையே நின்னையே
யெளியேன் மறந்துய்வனோ
வேதமுத லானநல் லாகமத் தன்மையை
விளக்குமுட் கண்ணிலார்க்கு
மிக்கநின் மகிமையைக் கேளாத செவிடர்க்கும்
வீறுவா தம்புகலுவாய்
வாதரோ யாளர்க்கு மெட்டாத முக்கனுடை
மாமருந் துக்கமிர்தமே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெ ணுமையே. (௩)

இராமேஸ்வரம் புத்தகஷாப் நாகலிங்கம் பிள்ளையவர்கள்

# சேதுமாதவ சுவாமிபேரில் பாடிய தோத்திரம்.

---

## பதினறுசீர் விருத்தம்.

திருமருவுமார்பனே ஜெயலட்சுமி லோலனே
தேவர் துதிக்கின்ற பரனே
தேவாதிதேவனே கௌஸ்துவாபரணனே
திங்களொளி பரவுபாதா
சேஷாதி சயனனே பக்தாட்சகனேகோடி
தேஜோமயப்பிர தாபா
ஜெகதலம்புகழ்ராமேச் சுரமீதிலடியவர்கள்
சேவித்து உனைப்போற்றவே
பத்மலோசனிதனைப் புண்யபாண்டியனது
பாலொப்பிலைவைத்த கோனே
பாரெலாந்துதிசெய்ய வேடந்தரித்துனது
பாததா மரைகள்நோவப்
பக்தருளங்களிகூற மலர்மங்கைகைபிடித்
தாண்டருள வுளங்கனிந்து
பாண்டியனிடத்தினில் அடியுண்டு மவனையும்
பாதுகாத் திடவேண்டியே
காட்சிதந்தெனேச்சதா காலமுமிவ்விதம்
போற்றுமடி யார்கள்வேண்டும்
வரமதுகொடுத்தெந்த நளும்ரட்சிப்பனென
வாக்களித் திட்டபொருளே
தேவர்கின்னாருரகர் மகரிஷிகள்சந்ததஞ்
சேவையது செய்துநிற்க
ஜெயஜெயவெனஉனது அடியவர்கள்வந்துநிதஞ்
சேவையது கண்டுபோற்ற
வேண்டுவரமளித்துனது மகிமையைப்புவியெலாம்
மேவிடச் செய்ததேவே
வேதாவையீன்றருள் சீதாபிராமனென
வேடந் தரித்துவந்து
வெகுகோடிபக்தர்களை ரட்சிககப்பூமிதனில்
சேஷசய னத்தைநீக்கி
தேவர்புகழ்ராமேச் சுரமேவுதேவனே
சேதுமாதவ சுவாமியே.

முற்றிற்று.